புலவர் மனைவியைப் போலப் புருஷர்களைக் காப்பாற்றும் பொருட்டுத் தங்கள் சாப்பாட்டையும் வயிற்றின் அளவில் குறைத்துக் கொள்வது குலப்பெண்களுக்கு அழகாகும்.

புலவர் புராணம்.

உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு.

உண்டி-சாப்பாடானது, சுருங்குதல்-(புருஷன் உண்ணும் அளவில்) குறைதல், பெண்டிர்க்கு-பெண்களுக்கு, அழகு-அழகாகும்.

6. சிலகாலத்துக்குமுன் ஏகசக்ரவனத்தில் பகாசுரன் என்று ஒரு கொடிய அரக்கன் இருந்தான். அவன் அதற்குச் சமீபத்தில் உள்ள வேத்திரகீயம் என்னும் அக்கிரகாரத்துக்கு வந்து இஃது எனது இருப்பிடத்தைச் சேர்ந்தது. எனக்குத் தினம் ஒன்றுக்கு வண்டிச் சாப்பாட்டையும், இரண்டு எருமைக் கடாக்களையும், ஒரு மனிதனையும் ஆகாரமாகச் செலுத்திவரவேண்டும். இல்லையேல், உங்கள் யாவரையும இப்பொழுதே ஒருமிக்கக் கொன்றுவிடுவேன்' என்று அங்கிருந்த அந்தணர்களைப் பயப்படுத்தித் தின்று வரத் தொடங்கினான். அவர்கள் எவ்வளவு சமாதானம் சொல்லியும் அவன் கேட்கவில்லை. நெடுநாள் வரையில் அவர்கள் விதியில்லாமல் அவற்றைக் கொடுத்துக்கொண்டு வந்து அவனைக்கொல்வதற்கு அந்தரங்கத்தில் ஆலோசனை செய்யலானார்கள். அப்பொழுது பாண்டவர் ஐவரும், துரியோதனன் தங்களைக் கொல்லக்கட்டின அரக்கு மாளிகையிலிருந்து தப்பிப்பிழைத்துத் தற்செயலாக அவ்வக்கிரகாரத்துக்கு வந்து சேர்ந்தனர். அங்கே அவர்கள் சிலநாட்கள் வரையில் தங்கியிருக்க நேரிட்டது. அப்பொழுது பீமசேனன் அந்தணர் துக்கத்துக்கு வருந்தித் துஷ்டனான பகாசுரனைக் கொன்று அவர்களின்

பயத்தை முழுவதும் நீக்கினன். ஆதலால், ஊரிலுள்ளவர்களுடன் பகைத்துக்கொண்டால் பகாசுரனைப் போல நாமும் அழியநேரிடும். மகாபாரதம்.

ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.

ஊருடன்-(தான் இருக்கும்) ஊராருடன், பகைக்கின்-(ஒருவன்) விரோதித்தால், வேருடன்-(அவன்) குலத்துடன், கெடும்-அழிந்துவிடுவான்.



7. a. வட இந்தியாவில் சிறு பருவத்திலேயே புருஷனை இழந்துபோன லீலாவதி என்னும் ஓர் அந்தணகுமாரி இருந்தாள். அவள் தன் பொழுது போக்கின் பொருட்டுத் தந்தையிடத்தில் கணித சாஸ்திரத்தைக் கற்றுவரத் தொடங்கினள். சில வருஷங்களுக்குள் அவளுக்கு அந்தச் சாஸ்திரத்தில் அதிக ஞானம் உண்டாயிற்று. பின்பு அவள் லீலாவதி என்று ஒரு பெரிய கணித நூல் இயற்றி அதனைப் பரவவைத்தாள். அந்நூல் இங்கிலீஷ் முதலான பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு இன்னமும் வழங்கி வருகின்றது. சாதுரியமும் விநோதமும் பொருந்திய கணிதநூல்களில் அதுவே முதன்மையானது. கணிதசாஸ்திரம் மனிதர்களுக்குக் கண்ணாக விருப்பதனால் அனைவரும் அதனை வருந்திக்கற்கவேண்டும்.

இந்தியமாதர் சரித்திரம்.

b. முன்னர்ப் பாடலிபுரத்தில் வர்ஷோபாத்தியாயர் என்று ஒரு அந்தணர் இருந்தார். அவரிடம் பல மாணாக்கர் வந்து படித்துவந்தார்கள். அவர்களில் பாணினி என்பவன் ஒருவன். அவனைப் புத்தியில்லாதவன் என்று மற்ற மாணாக்கர் அனைவரும் பழித்துப் பரிகாசம் செய்வார்கள். பாணினி அந்த அவமானத்துக்கு வருந்தி ஒருவரும் அறியாமல் வனத்துக்குச் சென்று அங்கு நெடுங்காலம்

வரையில் தவம்செய்து முடிவில் கடவுளருளால் பெரிய பண்டிதன் ஆனான். பின்னர், அவன் தன் பெயரை வைத்து ஒரு பெரிய இலக்கணசாஸ்திரம் இயற்றி அதனை உலகத்தில் பரவப்பண்ணினான். அது பாணினி இலக்கணம் என்ற பெயருடன் வடமொழியில் உள்ள எல்லா இலக்கணங்களுக்கும் மேலாக நின்று விளங்கி வருகின்றது. இலக்கணசாஸ்திரம் மனிதர்களுக்குக் கண்ணாக விருப்பதனால் அனைவரும அதனை வருந்திக் கற்கவேண்டும்.

தாசரித்சாகரம்.

எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்.

எண்ணும்-கணிதநூலும், எழுத்தும்-இலக்கணநூலும், கண் எனத்தகும்-(மனிதர்களுக்கு இரண்டு) கண்களென்று சொல்லத் தகும்.



8. அதிகாலத்தில் அயோத்தியின் அரசராகிய தசரதமன்னவருக்கு மூன்று மனைவிகள் இருந்தார்கள். மூத்தமனைவியின் புத்திரன் இராமன். அவன் நல்ல அழகன். கல்வி நிறைந்தவன். நல்லொழுக்கமுள்ளவன். பலசாலி. சூரன். ஒரு சமயத்தில் தசரதர் அவ்விராமனுக்கு இராஜ்ய பட்டாபிஷேகம பண்ண விரும்பினார். அஃது அவரது மூன்றாவது மனைவி கைகேயிக்குத் தெரிந்தது. அவளுக்குத் தசரதர் நெடுங்காலத்துக்கு முன்னர் இரண்டு வரம் கொடுத்திருந்தார். அவ்விரண்டில் ஒன்றினால் 'இராமன் பதினான்கு வருஷம் காட்டில் வாசம் செய்யவும், மற்றொன்றினால் தன் மகன் பரதன் நாட்டில் சிங்காசனத்திலிருந்து அரசுசெய்யவும் வேண்டும்' என்று கட்டாயப் படுத்தினாள். தசரதர் மறுக்க வகையில்லாமல் அதனை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. பிற்பாடு இராமன் அச்சிறிய தாயாரினாலேயே அந்தக் கட்டளையைத் தெரிந்து

கொண்டு மனைவி சீதையோடும் தம்பி இலக்ஷ்மணனோடும் அப்பொழுதே புறப்பட்டுத் தண்டகாரணியம் சென்றான். அவனைப்போலத் தாய் தந்தைகளின் குறிப்பை அறிந்து விருப்பத்தோடு நடந்துகொள்ளும் புத்திரர் பெற்றவருக்குத் தேவாமிருதத்தினும் சிறந்து விளங்குவார்கள்.

ஸ்ரீராமாயணம்.

## ஏவா மக்கள் மூவா மருந்து.

*ஏவா-(பெற்றவர் ஒன்றைச் செய்யென்று) ஏவுவதற்கு முன்னமே குறிப்பறிந்து செய்கின்ற, மக்கள்-பிள்ளைகள், மூவா மருந்து-(அப்பெற்றவர்களுக்கு) தேவாமிருதத்திற்கு (ஒப்பாவர்கள்.)*



9. ஆதிநாளில் அந்தணகுலத்தில் சுதாமா என்று ஒருவர் இருந்தார். அவருடைய ஊர் வடமதுரைப் பக்கத்தில் உள்ள ஒரு அக்கிரகாரம். அவர் மிகவும் தரித்திரர். அவர் தரித்திரத்தைச் சொல்லி முடியாது. அவர் உடுப்பதற்கும் வஸ்திரமில்லாமல் கிழிந்த கந்தைகளைத் தைத்து உடுத்தி வருவார். அதனால் அவருக்குக் குசேலர் (கந்தைத்துணி யுடையவர்) என்று பெயருண்டாயிற்று. அப்புறம் அப்பெயரே அவருக்குக் கடைசிவரையில் நிலைத்தும் நின்றுவிட்டது. அவருக்குப் பிள்ளைகள் இருபத்தேழுபேர். அப்பிள்ளைகளுக்கு மிகவும் அவசியமானவற்றைச் செய்வதற்குக்கூட அவருக்குச் சக்தியில்லாமல் இருந்தது. அத்தனை தரித்திரத்திலும் அவர் பிறரிடம் சென்று யாசகம் செய்ததில்லை. அந்தணருக்குரிய வைதிக கருமங்களில் கொஞ்சமும் பிசகுவதுமில்லை. தக்கபிராயத்தில் தம் பிள்ளைகளுக்கு உபநயனம் செய்து அவர்களை நல்லாசிரியரிடம் அனுப்பிக் கல்விகற்கப் பண்ணினார். அவர் ஒழுக்கத்தை அனைவரும் புகழ்ந்து கொண்டாடுவார்கள்.

பிற்பாடு, மற்றொரு சமயத்தில் கிருஷ்ணமூர்த்தி அவர் ஒழுக்கத்துக்குச் சந்தோஷித்து அதிகமான செல்வத்தை அவருக்கு அநுக்கிரகம் பண்ணினார். ஆதலால், ஒருவன் தரித்திரத்தினால் பிச்சையெடுக்கப் புகுந்தாலும், அவனுடைய கடமைகளில் தவறலாகாது. அவற்றைச் சரியானபடி செய்து முடிக்கவேண்டும். பாகவதம்.

## ஐயம் புகினும் செய்வன செய்.

ஐயம் புகினும்-பிச்சை யெடுக்கப் புகுந்தாலும், செய்வன-செய்யத்தக்க கடமைகளை, செய்-(கைவிடாது) செய்.



10. ஒருகாலத்தில் பாடசாலை ஆசிரியராக இருந்த ஒரு குரு தம் மாணாக்கனை அடுத்த பட்டணத்துக்கு வேலையாகச் சென்றுவரும்படி அனுப்பினார். அவன் தன் தாயாரிடம் சென்று "அம்மா! நான் அடுத்த பட்டணத்துக்கு அவசரமாகப் போய்வரவேண்டும். அதுது குருவின் கட்டளை" என்று சொன்னான். தாயார் துணையில்லாமல் செல்லக்கூடாதென்று ஒரு நண்டைப் பிடித்துக் கலயத்தில் இட்டுக் 'குழந்தாய்! நீ இந்நண்டையாவது துணை கொண்டு போ' என்று கொடுத்தனுப்பினாள். அவன் அதனை அலக்ஷியம் பண்ணாமல் எடுத்துச் சென்று பட்டண மடைந்து கட்டளையை முடித்துக் கொண்டு திரும்பிவருகையில், வழியில்களைத்து ஒருமரத்தடியில் படுத்துத் தூங்கிவிட்டான். அப்பொழுது அம்மரத்தின்மேலுள்ள ஒரு பாம்பு அவனைக் கடிக்கவந்து கலயத்தைக் கண்டு அதில் தலையை நுழைத்தது. உடனே அங்கிருந்த நண்டு அதன் தலையை இரண்டாகக் கத்தரித்துவிட்டது. மாணாக்கன் விழித்துக்கொண்ட பின்னர் அதனைக் கண்டு இந்தத் துணை இல்லாவிட்டால், நான்

இறந்துபோயிருப்பேனே என்று சொல்லிச் சந்தோஷப் பட்டான். ஆதலால், ஒவ்வொருவரும் துணைவைத்துக் கொண்டு ஓரிடத்தில் வாசம் செய்ய வேண்டும். பஞ்சதந்திரம்.

## ஒருவனைப் பற்றி ஓரகத் திரு.

ஒருவனை-(நற்குணமுடைய) ஒருவனை, பற்றி- துணைகொண்டு, ஓரகத்து-ஓரிடத்திலே (தானே), இரு-(எப்போதும்) வாசம் பண்ணு.



11. முற்காலத்தில் ஒரு முனிவர் காட்டில் தவம் செய்துவநதார். அவர் நல்லொழுக்கம் நிரம்பியவராதலால் பலவிதத்திலும் உயிர்களுக்கு உபகாரம் செய்துவருவார். காட்டு மிருகங்கள் யாவும அவர் உடமபின்மேல் உராய்ந்துகொண்டு தங்கள் உடம்பின் தினவை நீக்கிக் கொண்டிருந்தன. அக்காரணத்தினால், அவருக்கு 'மிருக கண்டு' என்று பெயர் உண்டாயிற்று. அவர் அநத உயர்ந்த ஒழுக்கத்தினாலேயே பிற்பாடு கடவுள் அருளுக்குப் பாத்திரரானார். அவர் புத்திரர்தாம் மார்க்கண்டர். இரண்டாவதுகதையில் அவரைப்பற்றித் தெரிந்துகொண் டிருக்கிறீர்கள். மிருககண்டு முனிவரைப்போல அந்த ணர்களுக்கு வேதம் ஓதுதலைக் காட்டிலும் பிறவுயிர்களுக்கு உபகாரம் செய்வதுபோன்ற நல்லொழுக்கம் உயர்ந்தது.

ஸ்காந்தம்.

## ஓதலின் நன்றே வேதியர்க் கொழுக்கம்.

வேதியர்க்கு-பிராமணர்க்கு, ஓதலின்-(வேதம்) ஓதலைக்காட்டி லும், ஒழுக்கம்-ஆசாரம், நன்று-நல்லது.



12. மலைகளுக்குள் மிகப் பெரியது இமாசலம். கங்கை முதலிய புண்ணியநதிகள் அதனிடம் உற்பத்தி

யாகின்றன. தேவர் யாவரும் அதனிடத்தில் வாசம் செய்கின்றனர். ஒருசமயத்தில் விந்தம் என்ற வேறொருமலை அதன் சிறப்பைக் கேட்டுப் பொறாமைகொண்டு அதனோடு பகைக்கத் தொடங்கிற்று. அம்மூடமலை 'இமயமலையானது அதிகமாக வளர்ந்திருப்பதுதான் அதன் சிறப்புக்களுக்கு முதற் காரணம். அதனைப்போல நாமும் உயர்ந்து வளர்ந்து விட்டால், அம்மலை அவமானத்தினால் வருந்தி அழிந்துபோகும்' என்று எண்ணிக்கொண்டு அன்று முதல் அதிகமாக வளர்ந்து ஆகாயத்தை மறைக்க ஆரம்பித்தது. அப்பொழுது அகஸ்தியமுனிவர் ஒருநாள் அந்தவழியில் வந்தார். விந்தமலை 'ஐயா! எங்கிருந்து வருகிறீர்கள்?' என்றதற்கு, அவர் 'இமய மலையிலிருந்து வருகிறேன்' என்று சொன்னார். விந்தம் 'முனிவரே! என்னைப் பாருங்கள்; நான் இப்பொழுது அந்த இமயத்தைக் காட்டிலும் இருமடங்கு அதிகமாக வளர்ந்திருக்கிறேன்; அஃது இப்பொழுது இருக்கும் இடமே தெரியாமல் அடங்கிப்போயிற்று. இன்னமும் அப்படியே நன்றாகத் தொலைந்து போகட்டும். அதன் கருவம் அடியோடு அடங்கவேண்டும்' என்று சொல்லிச் சந்தோஷித்தது. முனிவர் அதன் கருவத்தை அறிந்து அம்மலையைத் தரை மட்டமாக அடக்கித் தவம்செய்யச் சென்றார். அப்புறம் அம்மலை தலை நிமிரவேயில்லை. அதுபோல நாமும் பிறரைக் கண்டு பொறாமை வார்த்தைகளைப் பேசலாகாது. பேசினால் இருப்பனவும் அழிந்துபோய்விடும். ஸ்காந்தம்.

## ஒளவியம் பேசுதல் ஆக்கத்திற் கழிவு.

ஒளவியம் - பொறாமைச் (சொற்களை), பேசுதல் - (ஒருவன் எடுத்துப்) பேசுதல், ஆக்கத்திற்கு - (அப்பேசுகின்றவன்) செல்வத்திற்கு, அழிவு - கேட்டைத் தருவதாகும்.

13. முற்காலத்தில் திருவெண்ணெய் நல்லூரில் சடையப்ப முதலியார் என்று ஒருவர் இருந்தார். அவர் நிலத்தைப் பயிர் செய்து அதிகமான தானியங்களை விளைத்து, அதனால் பெரும் பொருள் சேர்த்தார். தானியமும் செல்வமும் அவரிடத்தில் அதிகமாகத் திரண்டிருந்தன. அக்காலத்தில் உறையூரைப் பரிபாலித்துவந்த குமார குலோத்துங்க சோழராஜன் அவருக்குச் சரியாசனம் கொடுத்து மரியாதை செய்து வந்தான். அவர் கவிசக்ரவர்த்தியான கம்பரால் இராமாயணத்தில் மிகவும் புகழ்ந்து சொல்லப்பட்டிருக்கிறார். அவருக் குண்டான அவ்வளவு பெருமைக்கும் காரணம் அவர் தனதானியங்களை வீண் செலவு செய்யாமல் அதிகமாகச் சம்பாதித்துச் சேர்த்ததேயாகும். ஆதலால், நாமும் அவரைப்போலத் தானியத்தையும் தனத்தையும் முயற்சிசெய்து சம்பாதிக்க வேண்டும். விநோதரசமஞ்சரி.

அஃகமும் காசும் சிக்கெனத் தேடு.

அஃகமும் - தானியத்தையும், காசும் - திரவியத்தையும், சிக்கென - வீண்செலவு (செய்யாமல்), தேடு - (நீ) சம்பாதித்துக் கொள்.

---

14. நிடத தேசத்துக்கு அரசனும் உலகத்துக்கெல்லாம் சக்ரவர்த்தியுமான நளமகாராஜாவுக்கு நளாயனி என்று ஒருபுத்திரி இருந்தாள். அவள் தனது மணப்பருவத்தில் மவுத்கல்யர் என்ற மகாமுனிவரை விவாகம் செய்து கொண்டாள். சில வருஷங்களுக்குப்பின் அம்முனிவருக்குக் குஷ்டரோகம் உண்டாயிற்று. உறுப்புக்கள் யாவும் அழுகிக் குறையத் தொடங்கின. உடம்பு முழுவதும் புண்மயமா யிருந்தது. சில சமயங்களில் அப்புண்களிலிருந்து

ஒருவனைக நாற்றத் தண்ணீரும் பெருகும். இவ்விதமிருந்தும், நளாயனி அவனைக்கண்டு கொஞ்சமும் அருவருக்கவில்லை. அவர் கட்டளைப்படி அவனை ஒரு கூடையில் உட்காருவித்துத் தலையில் எடுத்துக்கொண்டு தேசந்தோறும் திரிந்து தீர்த்தயாத்திரை செய்து அவர் மனம் களிக்கும் வண்ணம் பலவிதத்திலும் நடந்துவரத் தொடங்கினள். அவள் கற்பு இந்திரன் முதலான தேவர்களாலும் புகழ்ந்து பேசப்பட்டது. அவள் தன்னை *அமங்கலை யாகும்படிச் சபித்த ஒரு முனிவர் காரணமாக ஐந்து நாட்கள் வரையில் சூரியனையும் வெளியில் வரவொட்டாமல் தடைசெய்துவிட்டனள். ஆகலால், கற்பு என்பது நளாயனியைப் போலக் கணவர் சொல்லுக்கு அடங்கி நடப்பதே யாகும்.

மகாபாரதம்.

கற்பெனப் படுவது சொல்திறம் பாமை.

*கற்பு எனப்படுவது - (பெண்களுக்குக்) கற்பென்று சொல்லப்படுவது, சொல் - (கணவர்) சொல்லுக்கு, திறம்பாமை - தப்பி நடவாமையாம்.*



15. 8. வது கதையில் இராமன் தன்மனைவி சீதையுடன் இலக்ஷ்மணன் பின்தொடரப் பதினான்கு வருஷம் வரையில் காட்டில் வாசஞ்செய்யப் போனான் என்று படித்திருக்கிறீர்கள். அம்மூவரும் வனத்தில் வசிக்கும் பொழுது இலங்கைத்தீவின் அரசனாகிய இராவணன் என்பவன் சீதையின் அழகைக் கண்டு அவளைத் தனக்கு மனைவியாக்கிக்கொள்ள விரும்பினான். அதனால், அவன் இராமலக்ஷ்மணர் ஆச்சிரமத்தில் இல்லாத சமயம் பார்த்து உள்ளே நுழைந்து சீதையைத் தூக்கிக்கொண்டு போய்த்

* அமங்கலை—புருஷனிழந்தவள்.

மலைப்பாம்பாகக்கடவாய்' என்று சாபம் கொடுத்தார். அப்புறம் அம்மன்னவன் அவ்வடிவத்தை அடைந்து பலவருஷ காலம்வரையில் வருந்தினான். ஆதலால், நம்மோடு பேசுகின்றவர் தொழிலிலும் ஒழுக்கத்திலும் தாழ்ந்தவர்களாக இருந்தாலும் நாம் அவரிடத்து வணக்கமாகவே பேச வேண்டும். மகாபாரதம்.

## கீழோ ராயினும் தாழ வுரை.

கீழோர் ஆயினும்-(கேட்பவர் உனக்குக்) கீழ்ப்பட்டவர்களாக இருந்தாலும், தாழ - (உன்சொல்) வணக்கமுடையதாக இருக்கும் படி, உரை - (நீ அவருடன்) பேசு.



18. முன்பு சந்திரகுலத்தில் திருதராஷ்டிரன் பாண்டு என்று இரண்டு அரச சகோதரர் இருந்தனர். திருதராஷ்டிரனுக்குத் துரியோதனன் முதலான நூறுபிள்ளைகள் பிறந்தார்கள். பாண்டுவுக்குத் தருமன் முதலான ஐந்து பிள்ளைகள் பிறந்தார்கள். இவர்களில் துரியோதனன் பொறாமை முதலிய தீக்குணம் நிறையப் பெற்றவன். அதனால், அவன் தனது பாலியப் பருவம்முதல் பாண்டவர்களுக்கு பலவிதமான கெடுதிகளைச் செய்து வந்தான். பீஷ்மர் என்ற பெரியவர் இவர்களுக்குப் பெரிய பாட்டனார். அவர் ஆதிமுதல் திருதராஷ்டிரன் பக்ஷத்திலேயே யிருந்து அவன் பிள்ளைகளுக்கு இதம் செய்து வந்தார். துரியோதனன் செய்யும் அக்கிரமம் யாவும் அவருக்கு நன்றாகத் தெரியும். ஆயினும், அவர் அவனைவிட்டு அவன் விரோதிகளான பாண்டவர்களை அடையவில்லை. மிகவும் கொடியவனான துரியோதனன்பொருட்டுப் பாரதச் சண்டையில் சேனாதிபதியாகவும் நின்று பத்துநாட்கள் வரையில் யுத்தம்பண்ணி அச்சண்டையில் மரணமும் அடைந்

தார். அவரைப்போலவே நாமும் பந்துக்களிடத்தில் குற்றத்தைப் பாராட்டலாகாது. ஏனென்றால், குற்றமில்லாதவர் என்று ஒருவரும் ஏற்படமாட்டார்கள். மகாபாரதம்.

குற்றம் பார்க்கின் சுற்ற மில்லை.

குற்றம்-(ஒருவன்செய்த) குற்றங்களை, பார்க்கின்-(ஆராய்ந்து) பார்த்தால், சுற்றம் - (அவனுக்கு) உறவாயினவர், இல்லை - (ஒருவரும்) இல்லை.



19. ஆதிகாலத்தில் சலந்தரன் என்ற அசுரன் ஒருவன் இருந்தான். அவன் நான்முகக் கடவுளிடம்பெற்ற வரத்தின் மகிமையினால் கருவம்கொண்டு இந்திரன் முதலான தேவர்களையும் பொருளாக எண்ணுவதில்லை. சண்டையில் உண்மையாகவே அவன்முன் ஒருவரும் நிற்கமாட்டார்கள். அனைவரும் நடுங்கி ஒடுங்கிப் போவார்கள். அசுரன் அவர்கள் பலவீனத்தை அறிந்து அனைவரையும் வருத்தி வேலை வாங்கி வந்தான். அவன் ஒருசமயம் யுத்தத்தை விரும்பிக் கைலாயம் சென்று சிவபெருமானைக் கண்டு 'என் தோள்கள் தினவு கொள்கின்றன. அதைந்து அடங்கும்வண்ணம் தாங்கள் என்னோடு சண்டைசெய்ய வரவேண்டும்' என்றான். அவர் 'சூரனே! அங்ஙனமே வருகிறேன்' என்று சொல்லித் தம் கால் விரலால் நிலத்தில் வளையமாகச் சுழித்து 'இச்சுழிக்குள் அடங்கிய நிலத்தை முதலில் உன் தலையில் எடுத்து வைத்துக்கொள்!' என்றார். அவன் அகங்காரத்தோடு அச்சுழியைத் தூக்கி வைத்துக்கொண்டான். அச்சுழி உடனே ஒரு சக்ராயுதமாக மாறி அவன் உடலை அந்நிமிஷத்திலேயே மூன்று பாகமாகப் பிளந்து தள்ளிற்று. அவன் அநியாயமாக இறந்துபோய்விட்டான். ஆதலால், ஆயுதம் வரம் முத

லான பலங்களினால் ஒருவன் சூரனாக இருந்தாலும் வீரி யம்கொண்டு அயலாரோடு பேசலாகாது. ஸ்காந்தம்.

**கூரம் பாயினும் வீரியம் பேசேல்.**

கூர் அம்பு ஆயினும்-(உன்கையில் இருப்பது)கூர்மை(பொருந்திய) அம்பாக இருந்தாலும், வீரியம்-வீரத்தன்மையை, பேசேல்-(நீ கருவித்துப்) பேசாதே.



20. 18-வது கதையில் துரியோதனன் பாண்டவர்களுக்குப் பலவிதமான கெடுதிகள் செய்துவந்தானென்று படித்திருக்கிறீர்கள். அவன் ஒருசமயத்தில் காளமுனிவர் என்ற ஒரு தபசியைக் கண்டு வணங்கி ‘தாங்கள் எப்படியாவது பாண்டவர்களை அழித்துவிடவேண்டும்’ என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். அம்முனிவர் ‘அரசனே! உன் எண்ணப்படி நான் மரணயாகம் செய்து பாண்டவர்களை அழித்துவிடுகிறேன்’ என்று விதியில்லாமல் ஒப்புக்கொண்டு வனத்திற்கு வந்து பெரிய வேள்விசெய்து ஒரு கொடிய பூதத்தை உண்டு பண்ணினார். அப்பூதம அவர் கட்டளையின் வண்ணம் காட்டில் வசித்திருந்த பாண்டவர்களைக் கொல்லப் போயிற்று. அப்பொழுது பாண்டவர்களில் பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் என்ற நால்வரும் ஒருவிதமான விஷத்தண்ணீரை அருந்திச் செத்தவர்போல ஒரு குளக்கரையில் விழுந்து கிடந்தார்கள். மூத்தவரான தருமபுத்திரர் வேறோரிடத்தில் சாவுக்குச் சமமான மூர்ச்சை அடைந்து கிடந்தார். அந்தக் கொடிய பூதம் அங்கே வந்துபார்த்து ‘முனிவர் தன்னைச் செத்தவர்களைக் கொல்லக் கூறினார்’ என்று கோபங்கொண்டு திரும்பிச்சென்று அம்முனிவரையே கொன்றுபோயிற்று. அதுபோல நம்முடைய காரியங்களும் பிறருக்குக் கெடுதி செய்வதானால் அவற்றைச் செய்யாமல் விட்டுவிடவேண்டும். மகாபாரதம்.

## கெடுவது செய்யின் விடுவது கருமம்.

கெடுவது - (தான் எடுத்துக்கொண்ட கருமம் பிறருக்குக்) கெடுதியை, செய்யின் - செய்வதாக இருந்தால், கருமம் - அத்தொழிலை, விடுவது - (உடனே) விட்டுவிடவேண்டும்.



21. ஆதி நாளில் அயோத்திக்கு அரசனாயிருந்த அரிச்சந்திர மன்னவன் சூரிய குலத்தில் பிறந்தவன். அவன் ஒருகாலத்தில் விசுவாமித்திர முனிவருக்குத் தன் இராஜ்யத்தைத் தானம் கொடுத்துவிட்டுக் காசிப்பட்டணம் போனான். அங்கு அவருக்குத் தரவேண்டிய கடனுக்காக மனைவியையும் மகனையும் காலகண்டன் என்ற ஒரு அந்தணனுக்கு அடிமையாக்கித் தானும் வீரபாகு என்னும் ஒரு பறையனுக்கு அடிமைப்பட்டுச் சுடுகாட்டில் பிணங்களைச் சுட்டுக்கொண்டிருந்தான். பின்னர் விசுவாமித்திரர் சூழ்ச்சியினால் அவன் மனைவியின்மேல் கொலைக் குற்றம் சாட்டப்பெற்றது. காசியரசன் அவளுக்குக் கொலைத்தீர்ப்புப் பண்ணிவிட்டான். முனிவர் அந்தக் கொலையை அரிச்சந்திர மன்னவனே செய்து முடிக்கும்படி உபாயம் செய்திருந்தார். அரிச்சந்திரன் அப்பொழுது கூடக் கொஞ்சமும் வருந்திச் சிந்திக்கவில்லை. 'ஒரு பொய் சொல்லிவிடு! உன் அரசு முதலிய எல்லாவற்றையும் இப்பொழுதே உனக்குச் சொந்தமாக்கி விடுகிறேன்' என்று சொல்லிய விசுவாமித்திர முனிவர் வார்த்தைக்கும் அவன் செவி கொடுக்கவில்லை. அந்த ஆபத்துக் காலத்திலும் 'நான் ஒருபொழுதும் பொய் சொல்லமாட்டேன்' என்று ஒரே உறுதியாக நின்று உயர்ந்த கீர்த்தியையும், இழந்த ராஜ்யத்தையும் அடைந்தான். ஆதலால், கஷ்டகாலத்தில் ஒருவன் மனம் தளராமையானது இழந்த பொருளையும் கூட்டுவிக்குமென்று இதனால் தெரிகின்றதல்லவா!

அரிச்சந்திர புராணம்.

## கேட்டில் உறுதி கூட்டும் உடைமை.

*கேட்டில்-(கைப்பொருள்) இழந்த காலத்தில், உறுதி-(மனம்) தளராமையானது, உடைமை - (முன்போல அப்பொருள்) உடையவனாகும் தன்மையை, கூட்டும்-சேர்க்கும்.*

—ooo—

22. 13-வது கதையினால் குமார குலோத்துங்கனைப் பற்றியும் கவி சக்ரவர்த்தியான கம்பரைப்பற்றியும் சிறிது தெரிந்துகொண் டிருக்கிறீர்கள். கம்பர் அச்சோழ மன்னவனுடைய ஆஸ்தானபண்டிதர். ஒரு சமயத்தில் குலோத்துங்கன், கம்பரை 'அதிகப்பிரசங்கி: அடக்கமற்றவர்' என்று கோபித்து அவருடைய எல்லாப் பொருள்களையும் அபகரித்துக் கொண்டு விட்டான். கம்பர் உடுத்திருந்த வஸ்திரத்துடன் புறப்பட்டுக் காலினால் நடந்து சேர தேசத்தை அடைந்து அங்குத் தம்மை இன்னாரென்று அறிவிக்காமலேயே அவ்வரசனுக்கு அடைப்பைக்காரனாக* அமர்ந்திருந்தார். பின்னர் அவர் தமது கல்வித் திறமையினால் படிப்படியாக அவ்வேலையிலிருந்து மேல்வேலைகளுக்கு உயர்த்தப்பட்டு, முடிவில் அவ்வரசனையே தமக்கு அடைப்பைக்காரனாக நியமித்துக்கொண்டு சோழன் சபைக்கு வந்து தமது பெருமையை வெளிப்படுத்தினார். ஆதலால், ஒருவனுக்குச் செல்வப்பொருளைக் காட்டிலும் கல்விப்பொருளே மேலானது. விநோதரச மஞ்சரி.

## கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.

*கைப்பொருள் தன்னின் - (ஒருவனுக்குக்) கையிலிருக்கிற பொருளைப் பார்க்கிலும், மெய்ப்பொருள் - மெய்ப்பொருளாவது, கல்வி-(தான்கற்ற) வித்தையேயாம்.*



---

* அடைப்பைக்காரன்—வெற்றிலை மடித்துத் தருபவன்.

23. 9-வது கதையில் குசேலரைப்பற்றி அறிந்திருக்கிறீர்கள். அவரைப்போலத் தரித்திரத்தினால் வருந்தினவர் ஒருவரும் இல்லை. பறவைகளுக்காவது ஒருசமயம் அடுத்த நாளைக்கு உணவிருக்கலாம். அவருக்கு ஒரு வேளைச் சாப்பாட்டுக்குங்கூட வருமானம் கிடையாது. அதனுடன் அவருக்கு இருபத்தேழு பிள்ளைகள்வரையில் பிறந்து அவர் தரித்திரத்தை அதிகப்படுத்தினார்கள். அவர் இளம்பிராயத்தில் அரச குமாரராகிய கண்ணபிரான் அவரோடு கல்வி கற்று அவருக்கு நண்பராக இருந்தார். ஒருசமயத்தில் குசேலர் அவரைக் காணத் துவாரகைக்குச் சென்றபோது கிருஷ்ணர் அவர் தரித்திரத்துக்கு வருந்தி அவருக்கு நிறைந்த செல்வத்தை உண்டுபண்ணினார். ஆதலால், குசேலரைப்போல ஒருவனை அரசன் அறிந்திருப்பதானது அவனுக்குத் தரித்திரம் முதலான ஆபத்துக்கள் வந்தவிடத்தில் தங்க உதவியாகும். பாகவதம்.

கோற்றவன் அறிதல் உற்றிடத் துதவி.

கொற்றவன்-அரசன், அறிதல் - (ஒருவனை) அறிந்திருப்பது, உற்றிடத்து - (அவனுக்கு) ஆபத்து வந்த இடத்து, உதவி - உதவி செய்வதாகும்.



24. 18-வதுகதையினால் துரியோதனன் உங்களுக்கு ஒருவாறு தெரியுமல்லவா? காந்தார தேசத்துக்குத் தலைவனாகிய சகுனி யென்பவன் அவன் தாயின் சகோதரன். அவன் துரியோதனனுக்கு அநுகூலம் செய்கின்றவனைப் போலப் பாண்டவர்களைப்பற்றி அவனிடத்தில் பலவாறு கலகம் பண்ணி வந்தான். இயற்கையிலேயே பாண்டவர்களைப் பகைத்துவரும் துரியோதனனுக்கு அக்கலக வசனங்கள் காற்றுடன் சேர்ந்த நெருப்பைப்போல மூண்டு

உண்மையாக விளங்கின. அதனால், அவன் பாண்டவர்களை இன்னும் அதிகமாகத் தூஷித்துப் பகைக்கத்தொடங்கினன். அந்தப் பகை அப்படியே வளர்ந்து பிற்பாடு இருவருக்கும் குருக்ஷேத்திரத்தில் பெரிய யுத்தத்தை உண்டுபண்ணிற்று. சகுனி அப்பொழுதுங்கூடத் துரியோதனனிடத்தில் பாண்டவர்களைப் பற்றிக் கோள்சொல்வதை விட்டுவிடவில்லை. துரியோதனன் அவன் வசனங்களைக் கேட்டதன் பலனாகத் தன் சுற்றத்தார் யாவரையும் ஒருமிக்க இழந்து தனக்கும் மரணத்தைச் சொந்தமாக்கிக் கொண்டான். இதனால், கோள் வார்த்தைகளைக் கேட்பவனுக்கு அது காற்றோடு சேர்ந்த நெருப்பைப்போல மூண்டு அவனைப் பெருங்கெடுதிக்குச் சொந்தமாக்குகிக்குமென்று வெளியாகின்றது. மகா பாரதம்.

## கோட்செவிக் குறளைக் காற்றுடன் நெருப்பு.

*கோள்செவி-கோள் கேட்கின்றவன் காதில், குறளை-(பிறர்மேல் ஒருவன் வந்துசொன்ன) கோள் வார்த்தைகள், காற்றுடன்-காற்றுடன் (சேர்ந்த), நெருப்பு-நெருப்பைப்போல மூளும்.*



25. முன்னை அத்தினபுரத்தில் துரியோதனன் பாண்டவர்களுடைய எல்லாச் செல்வங்களையும் சூதினால் அபகரித்துக் கொண்டுவிட்டான். அப்பொழுது பெரியவர், பன்னிரண்டுவருஷம் வனத்திலும், ஒருவரும் அறியாமல் ஒருவருஷம் நாட்டிலும் பாண்டவர் வசித்து வரவேண்டும் என்றும், அதன்பின்னர்த் துரியோதனன் அவர்கள் இராஜ்யத்தை ஒப்புவித்து விடவேண்டும் என்றும் ஏற்பாடு பண்ணினார்கள். பாண்டவர்கள் வனவாசமும் அஞ்ஞாதவாசமும் கழித்து வந்தபிற்பாடு தங்கள் இராஜ்யத்தைப் பெற்று வரும்படி கண்ணபிரானைத் துரியோதனனிடம்

தூது அனுப்பினார்கள். அவர் பாண்டவர்களுக்காக அத்தினபுரத்துக்கு வந்தபொழுது விதுரன் என்பவன் அவருக்கு முதல்விருந்து செய்தான். அவன் துரியோதனனுக்குச் சிறிய தந்தை யாகவேண்டும். மறுநாள் துரியோதனன் இராஜசபையில் 'சத்துருவைச் சார்ந்தவனுக்குத் தன் கட்டளை யில்லாமல் விருந்தளித்து உறவு கொண்டாடினான்' என்று கோபித்து விதுரனைத் தாழ்ந்தகுலத்தில் பிறந்தவன் என்றும், குற்றேவல்செய்து பிழைக்கும் தாசியின் மகன் என்றும், நன்றியற்றவன் என்றும், அற்பபுத்தியுள்ளவன் என்றும், சாதிக்குத் தகுந்தபடியல்லாமல் உயர்ந்த புத்தி எப்படிவரும் என்றும் பலரும் கேட்கப் பலவாறு தூஷித்துப் பேசினான். சபையில் இருந்தவர் அவ்வசனங்களைக்கேட்டு அவனைப் பழிக்கத்தொடங்கினார்கள். உடனே விதுரன் அவமானமும் கோபமும் அடைந்து இனித் துரியோதனனுக்கு ஒருபொழுதும் துணை செய்வதில்லை என்று தன் பெரிய வில்லை அப்பொழுதே வெட்டியெறிந்து வெளியிற் சென்றுவிட்டான். அதனால், துரியோதனன் பிற்பாடு பாரதயுத்தத்தில் விதுரன் உதவியை அடைய முடியாமற் போயிற்று. ஆதலால், நாம் பிறருக்குப் பழிப்பை உண்டாக்கும்படியான கெட்ட வார்த்தைகளைச் சொல்லலாகாது. *மகா பாரதம்.*

### கௌவைச் சொல்லின் எவ்வருக்கும் பகை.

கௌவை-(பிறர்மேல்) பழிச்சொற்களை, சொல்லின் - (ஒருவன்) சொன்னால், எவ்வருக்கும் - எல்லாருக்கும், பகை - (அவன்) பகையாவான்.



26. ஆதிநாளில் அயோத்தியைப் பரிபாலித்துவந்த தசரத சக்ரவர்த்திக்குப் பல மனைவிகள் இருந்தார்கள்.

அவர்களில் ஒருத்தியின் வயிற்றிலாவது அவருக்குப் புத்திரன் உண்டாகவில்லை. பிற்பாடு அவர் குருவாகிய வசிஷ்ட முனிவரிடத்தில் நன்றாக ஆலோசித்துப் புத்திரகாம இஷ்டி என்ற ஒரு பெரிய யாகத்தைச் செய்தார். அதனால், கௌஸல்யை, கைகேயி, சுமித்ரை என்ற முக்கியமான மூன்று மனைவிகளிடத்திலும் இராமன், பரதன், இலக்ஷ்மணன், சத்ருக்னன் என்று நான்குபிள்ளைகள் பிறந்தார்கள். ஆகையால், தசரதரைப்போல எப்படியாவது முயற்சி செய்து நல்ல வழியில் சந்ததியை விருத்தி பண்ணவேண்டும். இராமாயணம்.

சந்ததிக் கழகு வந்தி செய்யாமை.

சந்ததிக்கு-(தன்) வம்சம் பெருகுவதற்கு, அழகு-அழகாவது, வந்தி-(தன் மனைவியை) மலடியாக, செய்யாமை-செய்யாமல் (கூடி) மக்களைப் பெறுவதாகும்.



27. சிலகாலத்துக்கு முன்னர்ச், சீர்காழியில் திருஞானசம்பந்தர் என்றவர் அவதாரம் செய்தார். அவர் சிவ கடாக்ஷத்தினால் தமது இளம்பிராயத்திலேயே செய்யுள் வடிவமாகக் கடவுளைத் துதித்து வணங்கி வரத் தலைப்பட்டனர். மனிதர்களாற் செய்து முடிப்பதற்கு அசாத்தியமாகிய பல அற்புதமான காரியங்களையும் அவர் எளிதில் நிறைவேற்றிப் பெரும் புகழ் பெற்றனர். அவர் சைவ சமயாசாரியர்களில் முதன்மையானவர். தமிழ்நாட்டில் அவருடைய கீர்த்தி அதிகமாகப் பெருகி வளர்ந்து வருகின்றது. அதனால், அவர் தாயும் தந்தையும் அளவற்ற சந்தோஷத்தை அடைந்து மகிழ்ச்சி யடைந்தார்கள். அவர்களைப் போலத் தம் புத்திரன் பண்டிதனாக விளங்குகிறான் என்பதைக் கேட்பது பெற்றவர்களுக்குப் பெரிய சந்தோஷமாகும். பெரிய புராணம்.

## சான்றோர் என்கை ஈன்றோர்க் கழகு.

*சான்றோர் என்கை - (தம் புத்திரரைக் கல்வி யறிவால்) நிறைந்தவர்களென்று (கற்றவர்) சொல்லுவது, ஈன்றோர்க்கு பெற்றவர்களுக்கு, அழகு-அழகாகும்.*



28. *மதுரைப்பட்டணத்தில் மூர்த்திநாயனுர் என்று ஒரு சிவனடியவர் இருந்தார். அவர் நாள்தோறும் கடவுள் திருமேனிக்குச் சந்தனம் அரைத்துக் கொடுக்கின்ற திருப் பணியைச் செய்துவருவார். நாளடைவில் அவர் செல்வம் குறைந்து வறுமை வளர்ந்து போயிற்று. அதனுல், ஒரு சமயத்தில் சந்தனக்கட்டை வாங்குவதற்குப் பொருள் கிடைக்காமல் அவர் அருமைத் திருப்பணி நின்றுபோகும் சமயத்தில் இருந்தது. அவ்வுண்மைப் பக்தர் அதற்கு மனம் வருந்திக் 'கடவுளுக்குச் சந்தனம் அரைத்துக் கொடுக்கா மல் உலகத்தில் உயிர்பெற்றிருப்பதைக் காட்டிலும் இறப் பது மேலானது' என்று கட்டைக்குப் பதிலாகச் சந்தனக் கல்லில் தமது முழங்கையை மடக்கிவைத்து அரைக்கத் தொடங்கினுர். கடவுள் அவர் பக்திக்குச் சந்தோஷித்து அப்பொழுது மதுரைப் பட்டணத்தில் கொடுங்கோல் செலுத்திவந்த கர்நாடக அரசனை நீக்கி அவ்வரசாட்சியை அவருக்குச் சொந்தமாக்கினுர். அவர் அங்ஙனமே அரச ராகி நெடுங்காலம் வரையில் தமது பணிவிடையை நிறை வேற்றிக்கொண்டு வந்து பெரும்புகழ் அடைந்தார். அவ ரைப்போலச் சிவபெருமானுக்குத் தொண்டுசெய்வது ஒரு வன் செய்யும் தவத்துக்குச் சிறந்த அழகாகும்.*

*பெரிய புராணம்.*

## சிவத்தைப் பேணின் தவத்துக் கழகு.

*சிவத்தை - (எண்ணிய பலனைத் தருகின்ற) பரமசிவத்தை, பேணின்-(குறித்துத்) தொண்டுசெய்தால், தவத்துக்கு-(செய்யும்) அத்தவத்தினுக்கு, அழகு-அழகாகும்.*

29. முன்பு ஆறையூரில் ஏகம்பவாண முதலி என்று ஒருவர் இருந்தார். அவர் இளம்பருவத்தில் கவிசக்ரவர்த்தியாகிய கம்பரிடத்தில் கல்விகற்றுப் பெரிய படிப்பாளியானார். அவருக்கு விசேஷமான விளைநிலங்கள் இருந்தன. அவர் அப்புறம் பயிர்த்தொழிலில் மேம்பட்டுச் சிறந்த செல்வமுள்ளவராகிச் சேரன், சோழன், பாண்டியன் என்ற மூன்று தமிழ்நாட்டு வேந்தர்களுக்கும் மேலாக விளங்கினார். அம் மூன்று அரசர்களும் அவருக்கு அடங்கி நடந்து வரத் தொடங்கினார்கள். அக்காலத்தில் பயிரிலாவது, பணத்திலாவது, புகழிலாவது அவரைப் போட்டிசெய்பவர் இலர். கம்பர் முதலான மகாகவிகளும் ஏகம்பவாண முதலியாரைப் பலவிதமாகப் புகழ்ந்துபாடிப் பரிசுபெற்றிருக்கிறார்கள். அவ்வளவு பெருஞ் சிறப்பும் அவருக்குப் பயிர்த்தொழிலினால் வந்ததேயன்றி வேறன்று. ஆதலால், புகழை அடைய விரும்புகின்றவன் பயிர்த்தொழில் செய்ய வேண்டுமென்று இதனால் வெளியாகின்றதல்லவா?

விநோதரசமஞ்சரி.

## சீரைத் தேடின் ஏரைத் தேடு.

சீரை - புகழை, தேடின் - தேடுவாயானால், ஏரை - பயிரிடும் தொழிலை, தேடு-(நீ முதலில்) தேடிக்கொள்.



30. முற்காலத்தில் கிருஷ்ண பகவான் வடமதுரைப் பட்டணத்தில் வசுதேவர் என்ற அரசனுக்குப் புத்திரராகப் பிறந்தார். அவர் சில காரணங்களினால் அந்தப் பட்டணத்திற்குப் பக்கத்திலுள்ள ஆயர்ப்பாடி என்னும் இடைச்சேரியில் வளர்ந்து வரத் தொடங்கினார். அதனால், அவ்விடையர்களிடம் அவருக்கு மிகுந்த அன்பு உண்டாயிற்று. அவர் அரை நிமிஷமும் அவர்களை விட்டுப் பிரியாமல் இருந்ததல்லாமல் அவர்களுக்குக் கொஞ்சமும் குறைவு

நேரிடாமலும் காப்பாற்றிக் கொண்டு வந்தார். அவர் மலையைத் தூக்குதல், பாம்பை அடக்குதல், அசுரரை அழித்தல் முதலான பல அரிய வேலைகளையும் அவர்கள் பொருட்டுச் சந்தோஷமாகச் செய்து முடித்தார். அவர்களும் அவரை மிகவும் பக்ஷமாக நடத்தி அவர்பொருட்டுத் தங்கள் உயிரையும் கொடுக்கத் துணிந்திருந்தார்கள். எந்தச் செய்தியாயினும் அவர்கள் கிருஷ்ணனுடன் ஆலோசனை பண்ணுமல் இருந்ததேயில்லை. நாமும் அவரைப்போல எப்பொழுதும் சுற்றத்தாரோடு கூடியிருந்து அவர்களுக்கு உதவி செய்து வரவேண்டும். பாகவதம்.

சுற்றத்திற் கழகு சூழ விருத்தல்.

சுற்றத்திற்கு - உறவின் முறையாருக்கு, அழகு - அழகாவது, சூழ-சமீபத்திலேயே, இருத்தல்-தங்கி யிருத்தலாம்.



31. 18, 20, 24-வது கதைகளில் துரியோதனன் பாண்டவர்களைக் கெடுக்கவேண்டும் என்று தன் இளம் பிராயம் தொடங்கிப் பலவிதமான சூதுமார்க்கங்களைச் செய்துவந்தான் என்று படித்திருக்கிறீர்கள். அவன் பாண்டவர்களுடன் சூதாடி அவர்கள் நாடு நகரங்களைப் பறித்துக் கொண்டதுமன்றிச் சபையில் பலவிதமான பரிகாச வார்த்தைகளையும் பேசி அவர்களை அவமானப்படுத்தினன். அவன் செய்த அக்கிரமங்களை ஒருவரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். பாண்டவர்களைக் கெடுக்கச் சூழ்ச்சி செய்வதும் அது பயன்படாது போவதற்குச் சிந்திப்பதுமாகவே அவன் வாழ்நாட்களில் பெருமபாகமும் கழிந்து போயின. பிற்பாடு, அவன் அவ்வேதனையினுலேயே துன்பப்பட்டு அவர்களோடு சண்டைசெய்து இரணகளத்தில் இறந்துபோய் விட்டான். ஆதலால், சூது முதலான வஞ்சனைகள் ஒருவனுக்குத் துன்பத்தை உண்டுபண்ணும் என்

பதற்குத் துரியோதனன் இன்னமும் உதாரணமாக விளங்கி வருகிறான்.

மகாபாரதம்.

சூதும் வாதும் வேதனை செய்யும்.

சூதும்-சூதாடுதலும், வாதும்-குதர்க்கம்பேசுதலும், வேதனை-(பகையாகவரும்) வருத்தத்தை, செய்யும்-(அவைகளில் பழகுகின்றவர்களுக்கு) உண்டாக்கும்.



32. முன்னொருகாலத்தில் கங்கைக்கரையில் ஓரந்தணன் தவம் செய்துவந்தான். அவன் இரவும்பகலும் ஓயாமல் ஜபம் செய்து வருவது வழக்கம். ஒருநாள் சில செம்படவர் கங்கையாற்றுக்கு வந்து வலைவீசி மீன் பிடித்தனர். அவர்களுக்கு மிகவும் பெரிய உயர்ந்த மீன்கள் வலையில் அகப்பட்டன. அவர்கள் அவற்றில் சில மீன்களை நெருப்பிற் சுட்டு வதக்கி அங்குத் தின்றுகொண்டிருந்தார்கள். அந்தணன் அதனைக் கண்டு 'ஆ! இவ்வலைஞர் பாக்கியசாலிகள்; சுவையுள்ள மீன்களைத் தினமும் புதிதுபுதிதாகப் பிடித்துச் சுட்டுத் தின்றுவருகின்றனர்' என்று தன் நாவில் தண்ணீர் ஊறப்புகழ்ந்து கொண்டிருந்தான். பின்னர் நாளடைவில் அவ்வந்தணன் இறந்துபோனான். அவன் செய்த தவங்கள் யாவும் அவனுக்குக் கொஞ்சமும் பயன் தராமல் அழிந்து போயின. தவத்தை மறந்து வலைஞர் தொழிலைப் புகழ்ந்த பாபத்தினால் அவன் அப்புறம் வலைஞனாகப் பிறந்து நெடுங்காலம் வரையில் வருந்தினான். இதனால், செய்யும் தவத்தை மறந்தவன் துன்பத்துக்குச் சொந்தமாவான் என்பது வெளியாகின்றதல்லவா?

மகா பாரதம்.

செய்தவம் மறந்தால் கைதவம் ஆளும்.

செய்தவம்-(செய்யும்) தவத்தை, மறந்தால்-(ஒருவன்) மறந்தால், கைதவம்-துன்பமானது, ஆளும்-(அவனை) அடிமைகொள்ளும்.

33. முன்னர் யுவனாசுவன் என்று ஒரு அரசன் இருந்தான். அவனுக்கு நூறு மனைவிகள் இருந்தும் ஒருவரிடத்திலாவது புத்திரன் உண்டாகவில்லை. வனத்தி லிருந்த முனிவர்கள் அவ்வரசனுக்குப் புத்திரனை உண்டு பண்ணும்படியான வேள்வி யொன்று செய்து ஒருவித மான அமிருதத்தை அடைந்திருந்தார்கள். அதனைப் பருகுகின்றவர் கருப்பமடைந்து பிள்ளை பெறுவார். முனி வர்கள் அவ்வமிருதத்தை அரசனிடம் சேர்ப்பிப்பதற்குள் தற்செயலாக வேட்டையை முன்னிட்டு வனத்துக்கு வந்து தங்கின யுவனாசுவன் அன்றிரவுத் தூக்கம் கொள்ளாமல் நடுயாமத்தில் எழுந்து வெளியில் அலைந்துகொண் டிருந் தான். அதனால், அவனுக்குத் தாகம் அதிகமாயிற்று. அவன் தண்ணீரை விரும்பிச் சமீபத்திலிருந்த யாகசாலை யிற் புகுந்து அங்கிருக்கும் அமிருதத்தைத் தண்ணீரென்று தெரியாமல் எடுத்துப் பானம் செய்துவிட்டான். உடனே அது முனிவர்களுக்குத் தெரிந்தது. அவர்கள் மனம் வருந்தி 'அரசனே! உன் வயிற்றில் கர்ப்பம் இருக்கின் றது' என்று நடந்த சங்கதிகளைச் சொல்லி வருத்தப்பட் டார்கள். ஆயினும், அப்பொழுது செய்யத் தகுந்தது ஒன்றும் இல்லையல்லவா? பிற்பாடு, அவ்வரசன் வயிற் றைக் கிழித்துக்கொண்டு ஒரு குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்குத் தான் மாந்தாதா என்று பெயர். யுவ னாசுவன் தூங்கும் சமயத்தில் தூங்காமல் திரிந்ததனால் அமிருதத்தைப் பருகி அதனால் மரணமடைய லாயிற்று. ஆதலால், எப்படிப்பட்ட வேலையாயிருந்தாலும், நடுயாமத் தில் நித்திரைபண்ணவேண்டும். பாகவதம்.

## சேமம் புகினும் சாமத் துறங்கு.

சேமம் புகினும்-காவலுக்குச் சென்றாலும், சாமத்து-பாதி ராத் திரியில், உறங்கு-(நீ) நித்திரைபண்ணு.

34. துரியோதனனைப்பற்றி உங்களுக்கு நன்றாகத் தெரியும். அவனுக்குக் கர்ணன் என்று ஒரு அந்தரங்க நண்பன் இருந்தான். அவன் யாசகர்கள் வந்து எவற்றைக் கேட்டாலும் இல்லையென்று சொல்லாமல் கொடுத்துக் கொண்டு வருவான். அவன் புகழ் மூன்று உலகங்களிலும் சென்று பரவிற்று. ஒருசமயத்தில் இந்திரன் அந்தண வேஷத்தோடு வந்து கர்ணன் அணிந்துகொண்டிருந்த கவசத்தையும் குண்டலங்களையும் தானமாகக் கேட்டான். கர்ணன் தடைசொல்லாமல் கைவாளை யெடுத்துத் தன் உடம்போடு பிறந்த கவசத்தையும் குண்டலங்களையும் உடம்பில் இரத்தம் சொட்டச்சொட்ட அறுத்து இந்திரன் கையில் சந்தோஷமாகக் கொடுத்தான். 'இந்திரன் கபட வேஷத்தோடு வந்து யாசிக்கிறான்; நீ கவசகுண்டலங்களைக் கொடாதே; கொடுத்தால், உனக்கு ஆபத்துண்டாகும்' என்று சொல்லிய அசரீரியின் வசனத்தையும் அவன் பொருள் பண்ணவில்லை. அப்புறம் இந்திரன் ஆச்சரியப்பட்டு அவனுக்குத் தன் வடிவத்தைக் காட்டி வரங்களைக் கொடுத்து மறைந்தான். அவனைப்போலக் கையில் பொருள் கூடி யிருக்கும்பொழுது நாமும் இரப்பவர்களுக்கு இல்லை யென்னுமல் கொடுத்துவரவேண்டும்.

மகாபாரதம்.

**கையோத் திருந்தால் ஐயம் இட்டுண்.**

கை ஒத்திருந்தால்-கைப்பொருள் ஒத்திருந்தால், ஐயம் இட்டு-(இரப்பவர்களுக்குப்) பிச்சையிட்டு, உண்-(நீயும்) உண்ணு.



35. சென்னபட்டணத்தில் பச்சையப்ப முதலியார் என்பவர் இங்கிலீஷ்காரரிடத்தில் வியாபாரம் செய்து பெரும்பொருள் சம்பாதித்தார். பின்பு அப்பொருள்களைக்கொண்டு அவர் கல்வி முதலியபலவிதமான உயர்ந்த

தருமங்களைச் செய்து உலகத்தில் அதிக கீர்த்தியை அடைந்தார். காசி முதல் இராமேசுவரம் வரையில் உள்ள புண்ணியத் தலங்கள்தோறும் சென்று பலவிதமான தருமங்களைச் செய்து அவற்றால்வரும் இன்பத்தை அடைந்தார். ஆதலால், ஒருவன் பொருளினால் தருமத்தையும் இன்பத்தையும் பெறலாகும். *பச்சையப்பன் சரித்திரம்.*

**சொக்க ரென்பவர் அத்தம் பெறுவர்.**

*சொக்கர் என்பவர்-பொன்னுடையவர் என்று (சொல்லப்படுவோர்), அத்தம்-(அறமும் இன்பமுமாகிய மற்றைப்) புருஷார்த்தங்களையும், பெறுவர்-பெறுவார்கள்.*



36. 15 - வது கதையில் இராவணன் சீதையைச் சிறையெடுத்து வந்தானென்றும், அதன்பொருட்டு இலங்கைப் பட்டினத்தில் இராமனுக்கும் இராவணனுக்கும் பெரிய சண்டை நடந்ததென்றும் உங்களுக்கு நன்றாகத் தெரியும். அச்சண்டையில் இராவணன் தம்பியாகிய கும்பகர்ணன் என்பவன் சுக்கிரீவனோடு சண்டைசெய்து அதிக வருத்தப்பட்டு அவனைப் பிடித்துக்கொண்டு போனான். நடுவழியில் 'இனிக் கையில் அகப்பட்டவன் எங்குச் செல்லப் போகிறான்' என்று நினைத்துச் சோம்பலினால் அஜாக்கிரதையாக இருந்துவிட்டான். அவன் சோர்வை அறிந்த சுக்கிரீவன் தருணம் பார்த்து அவனுடைய மூக்கையும் காதையும் கடித்து எடுத்துக்கொண்டு இராமரிடம் வந்து சேர்ந்தான். இரணகளத்தில் வெற்றியடைந்து பகைவனைப் பிடித்துக்கொண்டு வந்தும் கும்பகர்ணன் தனது சோம்பலினால் பலனடையவில்லை. ஆதலால், சோம்பலுள்ளவர்கள் காரியத்தை முழுவதும் நிறைவேற்றாமல் கெடுத்துக்கொண்டு இடையில் வருந்திக் கஷ்டப்படுவார்கள். *இராமாயணம்.*

## சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்.

சோம்பர் என்பவர்-சோம்பலுடையவர் (என்று சொல்லப் படுவோர்), தேம்பி-(எடுத்துக்கொண்ட காரியம் நிறைவேறாமல்) வருந்தி, திரிவர்-(துன்பப்பட்டுத் திரிவார்.

37. முன்னாளில் ஜமதக்கினி என்று ஒரு முனிவர் இருந்தார். அவர் தவம் நிரம்பியவர். நல்லொழுக்க முள்ள வர். அவர் மனைவிக்கு இரேணுகை என்று பெயர். அவருக்குப் பரசுராமன் என்று ஒரு புத்திரன் பிறந்து கல்வியிலும் ஒழுக்கத்திலும் நிகரற்று விளங்கினான். ஒரு சமயத்தில் அவர் மனைவி சிறிய குற்றம் ஒன்று செய்துவிட்டாள். முனிவர் அதன்பொருட்டு ஒருநாள் தமது புத்திரனைப் பார்த்துக் 'குழந்தாய் பரசுராமா. இந்த வாளினால் உன்தாயாரின் தலையை வெட்டித்தள்ளி வா! இதுவே என் கட்டளை. நல்ல பிள்ளைகள் தந்தையின் கட்டளையைத் தவறி நடக்க மாட்டார்கள்' என்று சொன்னார். அவன் 'தன் தந்தை ஒருசமயம் மறந்து சொல்லி யிருக்கக்கூடும்' என்று நினைத்து 'ஐயா! தங்கள் கட்டளையை இன்னொரு தடவை விளங்கச் சொல்லுங்கள்' என்று கேட்டான். முனிவர் முன் சொன்னவற்றையே மறுபடியும் கூறினார். அப்புறம் அவன் ஒன்றும் மறுத்துச் சொல்லவில்லை. உடனே கட்டளையை நிறைவேற்றி வந்து அவரைப் பணிந்து நின்றான். தந்தை மிகவும் சந்தோஷித்துக் 'குழந்தாய்! நீ நல்ல பிள்ளை; உனக்கு இஷ்டமான வரத்தைக்கேள்! தருகிறேன்' என்று சொன்னார். பரசுராமன் 'ஐயா! என் தாயாரை எழுப்பித் தாருங்கள்! அதுதான் எனக்குச் சந்தோஷ மான வரம்' என்று சிரித்துக்கொண்டு கூறினான். முனிவர் அப்படியே எழுப்பிக் கொடுத்து அவனுக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணினார். ஆதலால், பரசுராமனைப்

போல நாமும் பிதாவின் கட்டளையைக் கேட்டு நடக்க வேண்டும். மகாபாரதம்.

**தந்தைசொல் மிக்க மந்திரம் இல்லை.**

*தந்தை - தகப்பனுடைய, சொல் - சொல்லுக்கு, மிக்க - மேற்பட்ட, மந்திரம்-(பலனைத்தரும்) மந்திரமானது, இல்லை-(ஒருவனுக்கு எந்த நூலிலும்) இல்லை.*



38. ஆதிகாலத்தில் காசிப முனிவருக்குக் கத்துரு என்று ஒரு மனைவி இருந்தாள். அவள் வாசுகி முதலான பாம்புகளுக்குத் தாய். ஒரு சமயத்தில் கத்துருவும் அம்முனிவரின் மற்றொரு மனைவியாகிய விநதை என்பவளும் ஒரு சோலையில் உலாவிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது இந்திரனுடைய வெள்ளைக் குதிரை அங்கே மேய்ந்து கொண்டிருந்தது. விநதை அதனைப் பார்த்துச் "சகோதரி! அந்த வெள்ளைக் குதிரையைப் பார்! அதன் உடம்பில் கறுப்புமயிர் ஒன்றாவது காணவில்லை. புண்ணிய புருஷர்களின் புகழைப்போல முழுவதும் வெளுத்திருக்கிறது" என்றாள். கத்துரு எப்படியாவது அவள் வார்த்தைக்கு மாறு சொல்லவேண்டும் என்று நினைத்து 'இல்லை; அது முழுவதும் வெண்மையானதன்று; அதன் வாற்புறம் கறுப்பாயிருக்கின்றது' என்று கூறினாள். விநதை சகோதரி! இல்லை; அது முழுவதும் வெண்மையானது' என்று மறுத்தாள். இருவரும் சமீபம் சென்று பார்ப்பதற்குள் அந்தக் குதிரை மறைந்து போயிற்று. பின்னர் அவர்கள் 'நாளை இருவரும் சென்று குதிரையைக் காணலாம்; ஜயித்தவருக்குத் தோற்றவர் அடிமையாகவேண்டும்' என்று நிபந்தனை செய்துகொண்டார்கள். கத்துரு அன்றிரவு தன் மக்களை நோக்கிப் 'பிள்ளைகளே! நீங்கள் இந்திரனது வெள்ளைக் குதிரையின் வாலில் இருந்து

கொண்டு அதனைக் கறுப்பாக்கவேண்டும். இல்லாவிட்டால், நான் விநதைக்கு அடிமைப்பட்டு வருந்தநேரிடும்' என்று சொன்னாள். வாசுகி முதலான சிறுவர் 'அம்மா, அஃது உயர்ந்த தெய்வ ஜாதிக் குதிரை ; எங்களால் அதனைக் கறுப்பாக்க முடியாது ; நீங்கள் வேறு யாவரையேனும் கொண்டு அந்தக் காரியத்தைச் செய்து கொள்ளுங்கள்' என்று மறுத்துவிட்டார்கள். கத்துரு மிகவும் கோபித்து ஒன்றும் செய்யத் தோன்றாமல் ' நீங்கள் யாவரும் விநதையின் புத்திரனான கருடனுக்கு உணவாகக்கடவது' என்று கொடுஞ் சாபம் கொடுத்தாள். அன்று முதல் அந்தப் பாம்புகளுக்கு அச்சாபத்தை நீக்கிக்கொள்ள முடியவேயில்லை ஆதலால், நாமும் அவர்களைப்போலத் தாயின் வார்த்தையைத் தள்ளி நடக்கலாகாது.

மகாபாரதம்.

தாய்ச்சொல் துறந்தால் வாசகம் இல்லை.

*தாய்-தாயினுடைய, சொல்-சொல்லை, துறந்தால்—(ஒருவன்) தள்ளிவிட்டால், வாசகம் - (அதற்கு மேற்பட்ட) வேதவாக்கியம், இல்லை-(அவனுக்கு) இல்லை.*

39. இங்கிலீஷ்காரர் முதலில் கடலைக் கடந்து இந்தியாவுக்கு வர்த்தகம் பண்ண வந்தனர். அவர்கள் இந்திய அரசர்களிடத்தில் கொஞ்சம் நிலம் கிரயத்துக்குப் பெற்றுக்கொண்டு அதனில் சிறிய கோட்டை ஒன்று கட்டித் தங்கள் வர்த்தகப் பொருள்களை வைத்துக் காப்பாற்றத் தொடங்கினார்கள். நாள் செல்லச் செல்ல வியாபாரம் விருத்தியாகி அவர்களுக்கு ஆற்று வெள்ளத்தைப் போலப் பெரும் பொருள் திரண்டு பெருகிற்று. அப்பொழுது இந்தியாவின் அரசர்கள் ஒருவருக்கொருவர் ஒற்றுமையில்லாமல் பகைத்துப் போராடிக்கொண் டிருந்தார்

களை. நாட்டில் சண்டையும் சச்சரவும் அதிகரித்திருந்தன. அரசர்களும் குடிகளும் ஒருவருக்கொருவர் சமாதானமில்லாமல் மிகவும் கொடிய சதிச் செயல்களையெல்லாம் செய்யத் துணிந்தனர். அப்படிப்பட்ட தருணத்தில் ஆங்கில வர்த்தகர் தங்களை உதவிக்கு விரும்பின சில அரசர்களுக்குச் சண்டையில் துணைசெய்து அவர்கள் வெகுமதியாகக் கொடுத்த பாகங்களைச் சொந்தமாக அடைந்தனர். பின்னர்ப் படிப்படியாக ஒவ்வொரு காரணத்தைக் கொண்டு மல்லா அரசர்களையும் அடக்கி நாளடைவில் இந்தியா முழுவதையும் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டுவிட்டனர். அவர்கள் முதலில் கடலைக் கடந்து வந்திராவிட்டால், இப்பொழுது நம் இந்தியாவில் இருந்துகொண்டு இஷ்டமானபடி சுகங்களை அநுபவித்து நம்மை அதிகாரம்செய்ய முடியாதல்லவா? அவர்களைப்போலவே நாமும் கடலைக் கடந்து சென்றுவது முதலில் பொருளைந் தேடவேண்டும்.

*இந்துதேச சரித்திரம்.*

திரைகட லோடியும் திரவியம் தேடு.

*திரைகடல் - அலைகளை (யுடைய) கடலிலே, ஓடியும் - (கப்பலேறித் தூரதேசங்களுக்குப்) போயானாலும், திரவியம் - திரவியத்தை, தேடு - (நீ) சம்பாதி.*



40. ஆதிகாலத்தில் இரணியகசிபு என்று ஒரு அசுர வரசன் தவம்செய்து பிரமதேவனிடத்தில் உயர்ந்த வரங்களைப் பெற்றிருந்தான். ஒருசமயத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணு பன்றி வடிவம் கொண்டுசென்று அவன் சகோதரனை இரணியாக்ஷன் என்பவனைக் கொன்றுவிட்டனர். அந்தக் காரணத்தினுல் இரணியகசிபு அவர்மீது கோபங்கொண்டு அவரை மிகவும் பகைத்துத் தனது ஆளுகையில் ஒருவரும் அவர் பெயரை உச்சரிக்கக் கூடாதென்று கட்டளையிட்

டிருந்தான். மறைவில் உச்சரிக்கின்றவர்களைக் கண்டுபிடித்துக் கடுமையான தண்டனையும் விதித்துவரத் தொடங்கினன். பின்னர் அவன் புத்திரன் பிரஹ்லாதன் என்பவனால் அக்கோபம் இன்னும் அதிகமாகப் பெருக ஆரம்பித்தது. முடிவில், அவன் ஸ்ரீ மகாவிஷ்ணுவோடு சண்டைசெய்து அவராலேயே இறந்துபோய் விட்டான். ஆதலால், ஒருவனிடத்திலுள்ள தீராத கொடிய கோபமானது சண்டையை உண்டாக்கி அவனுக்குக் கெடுதியாக முடியும். பாகவதம்.

## தீராக் கோபம் போராய் முடியும்.

தீராக்கோபம் - (எப்போதும் ஒருவனிடத்திலுள்ள) நீங்காத கோபமானது, போராய்-(பின்பு) சண்டையாக, முடியும்-முடியும்.



41. 8-வது கதையினால் தசரத சக்ரவர்த்தியின் மனைவியான கைகேயி என்பவள் தனக்குச் சக்ரவர்த்தி கொடுத்திருந்த இரண்டுவரத்தினால் இராமன் காட்டையும் பரதன் நாட்டையும் ஆளச் செய்யவேண்டுமென்று அவரை நிர்ப்பந்தித்தாள் என்று வெளியாகின்றது. அவள் அங்ஙனம் கேட்டபொழுது தசரதர் 'இராமனை வனத்துக்கு அனுப்பாதே; அவன் சென்றுவிட்டால் நான் இறந்துபோவது நிச்சயம்; இராமன் என் உயிர்; நீ வேறுவிதமான வரத்தைக் கேள்; தடையின்றித் தருகிறேன்' என்று பலவிதமாகப் புத்தி சொன்னார். கைகேயி அவரைப் பொய்யன் என்றும், வஞ்சகன் என்றும் தூஷித்து, எப்படியும் தன் வரத்தைக் கொடுத்தே தீரவேண்டும் என்று நிலத்திற் புரண்டு பிடிவாதம் பண்ணத் தொடங்கினாள். தசரதர் வேறு வகையில்லாமல் அவள் விரும்பினவண்ணம் இரண்டு வரத்தையும் கொடுத்து அப்பொழுதே மரணமடைந்துவிட்டார். கைகேயியைப்போலக் கணவன் வருத்தத்தைக் கண்டும் மனமிரங்காதவர்களும், கணவனைத் தூற்றித்

தூஷிக்கின்றவர்களும் அவனுக்கு மடியில் நெருப்பு இருப்பதைப்போலவும் யமனைப்போலவும் இருந்து துன்பம் விளைப்பார்கள். இராமாயணம்.

துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு.

துடியா-(தம் கணவருக்குத் துன்பம் வந்தகாலத்தில் மனம்) பதையாத, பெண்டிர்-மனைவிகள், மடியில்-(கணவர்) வயிற்றில், நெருப்பு-நெருப்பு இருப்பதற்கு ஒப்பாவார்கள்.

தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்.

தூற்றும்-(தம் கணவர்மேல் குற்றஞ் சொல்லித்) தூற்றுகின்ற, பெண்டிர்-மனைவிகள், கூற்று எனத் தகும்-(அவருக்கு) யமனென்று சொல்லத் தகும்.



43. ஆதிநாளில் சூரபதுமன் என்னும அசுரன் சிவபெருமானைக் குறித்து நெடுங்காலம் வரையில் பெருந்தவம் செய்துவந்தான். கடவுள் அவன் தவத்திற்குச் சந்தோஷித்து அவன் விரும்பினவண்ணம் தமது சக்தி ஒன்று தவிர மற்றெவராலும் அழியாதிருக்கும்படி வரம் தந்து மறைந்து போனார்.. அவ்வரத்தின் மகிமையினால் கருவம் கொண்ட சூரபதுமன் எல்லாந் தேவர்களையும் அசுரர்களுக்குக் குற்றேவல் செய்யச் சொல்லியும், மீன் பிடித்து வரச் சொல்லியும் நிர்ப்பந்தப்படுத்தி, இன்னும் பலவிதமான துன்பங்களுக்கும் அவர்களை உள்ளாக்கிக் கொண்டு வந்தான். பிற்பாடு, கடவுள் தேவர்களுடைய வேண்டுகோளின் மீது தமது நெற்றிக் கண்ணிலிருந்தும் முருகக் கடவுளை உண்டுபண்ணி யருளினார். அவர் பூதப்படைகள் தம்மைப் புடைசூழ்ந்து தொடர, மிகவும் ஆடம்பரத்தோடு வந்து சூரபதுமனை எதிர்த்துச் சண்டை செய்யத் தொடங்கினார். அச்சண்டையில் சூரனுடைய தலைகளை அவர் அறுத்துத் தள்ளத் தள்ள அவை வரத்தின் மகிமை

யினால் மீட்டும் மீட்டும் முளைத்து அவரோடு சண்டை தொடுத்து வந்தன. அதனைக் கண்ட முருகக்கடவுள் மிகவும் கோபங்கொண்டு ஒருவிதமான ஹுங்காரம் செய்தனர். அதன்பின்னர் அவன் தலை முளைக்கவேயில்லை. அப்படியே அடங்கிப் போயிற்று. அவ்வசுரனும் அழிந்து போய் விட்டான். ஆதலால், கடவுள் கோபிக்கத் தொடங்கினால், எப்படிப்பட்ட தவத்தின்பலனும் அழிந்துபோவது நிச்சயம். ஸ்காந்தம்.

தெய்வம் சீறின் கைதவம் மாளும்.

*தெய்வம் - தெய்வமானது, சீறின் - (ஒருவனைக்) கோபிக்குமானால், கைதவம்-(அவனுக்குக் கைகூடிவந்த தவத்தின் பலனும், மாளும்-சமயத்தில் (பயன்படாமல்) அழிந்துபோகும்.*



44. காவிரிப்பூம் பட்டினத்தில் வணிகர் குலத்தில் கோவலன் என்று ஒருவன் இருந்தான். அவனுக்குத் தந்தை கொடுத்த அளவற்ற பொருள்களையும் அவன் பலவிதமான கெட்ட விளையாட்டுக்களில் பாழ்செய்து அதிக சீக்கிரத்திலேயே தரித்திர தசைக்கு வந்துவிட்டான். அந்தப் பட்டினத்தில் மானமழியாமல் வாழ அவனுக்கு ஒருவழியும் ஏற்படவில்லை. அதனால், ஒருநாள் இரவில் தன் மனைவி கண்ணகியை அழைத்துக்கொண்டு ஒருவருக்கும் தெரியாமல் காலால் நடந்து மதுரைப் பட்டணம்போனான். அப்புறம் அவன் அங்குக் கடைத்தெருவில் விற்கச் சென்ற கண்ணகியின் காற்சிலம்பு களவுப்பொருள் என்று அவன் தரித்திர வேஷத்தினால் நிச்சயிக்கப்பட்டு மதுரை யரசனால் மரண தண்டனைக்கும் சொந்தமாய்ப் போனான். கோவலன் முதலில் மனம்போனவண்ணம் செலவு செய்யாதிருந்தால், அங்ஙனம் மரணம் அடைந்திருக்க வேண்டாமல்லவா? ஆதலால், நாமும் அவனைப்போல மனம்

வந்தபடி பொருளை அழிக்கத்தொடங்கினால் பின்னர்த் தரித்திரத்தினால் வருந்த நேரிடும். சிலப்பதிகாரம்.

**தேடா தழிக்கின் பாடாய் முடியும்.**

தேடாது - (ஒருவன் வருந்திச்) சம்பாதியாமல், அழிக்கின்- (தந்தை தேடிய பொருளை) மனம்போனபடி அழித்தால், பாடாய்- (பின்பு அவனுக்குத் தரித்திரத்தினால்) வருத்தமாக, முடியும் முடியும்.



45. முன்னொருகாலத்தில் காஸ்மீர தேசத்தில் இருந்த அமருகன் என்ற அரசனுக்கு நளிர்நோய் கண்டது. அந் நோய் பனிக்காலத்தில் மிகவும் வருத்தமான குளிரை உண்டுபண்ணி உடல் நடுங்கச் செய்யும். அவன் பலவித மான வைத்தியம் செய்தும் அந்நோய் குணமடையவில்லை. பிற்பாடு, வராகர் என்ற ஆயுள்வேத பண்டிதர் அவ்வரசனை ஒரு தாழ்ந்த வைக்கோல் வீட்டில் குடியேற்றியும், வைக் கோற் படுக்கையிற் கிடத்தியும், ஔஷதம் அளிக்கத் தொடங்கினர். சிலநாட்களில் அவ்வரசன் அம்மூன்று காரணங்களாலும் நோய் நீங்கிச் சுவஸ்த மடைந்தான். பனிக்காலத்தில் வைக்கோல் வீடு உஷ்ணமாக இருக்கு மென்பது இதனால் வெளியாகின்றது.

அஷ்டாங்க ஹ்ருதயம்.

**தையும் மாசியும் வையகத் துறங்கு.**

தையும்-தைமாதத்திலும், மாசியும்-மாசிமாதத்திலும், வைய கத்து-(பனி வருத்தம் தராத) வைக்கோல் வீட்டிலே, உறங்கு-(நீ) நித்திரைபண்ணு.



46. 13 - வது கதை திருவெண்ணெய் நல்லூரில் இருந்த சடையப்ப முதலியாரைப்பற்றி உங்களுக்குத் தெரிவித்திருக்கிறது. அவர் தாம் செய்துவந்த பயிர்த்-

தொழிலினாலேயே அரசனும் எழுந்து கவுரவிக்கும்படியான உயர்ந்தபதவியை அடைந்திருந்தார். அவர் பெரும் புகழ் உலகத்தில் இன்னமும் அழியாமல் இருந்து வருகின்றது. ஆதலால், உழுது பயிர்செய்வதைக் காட்டிலும் ஒருவனிடத்தில் உத்தியோகம் செய்து பொருள் சம்பாதிப்பது உயர்ந்ததொழில் ஆகமாட்டாது. விநோதரச மஞ்சரி.

தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.

தொழுது - (ஒருவரிடத்தில்) சேவித்து, ஊண்சுவையின் (உண்ணும்) உணவின் சுவையைக் காட்டிலும், உழுது - உழுது (பயிர்செய்து), ஊண் - (உண்ணும்) உணவின் சுவை, இனிது இன்பம் தருவதாகும்.



47. 9, 23-வது கதைகளில் குசேலரைப் பற்றிப் படித்திருக்கிறீர்கள். அவருடைய தரித்திரத்தை எவரும் வாய் கூசாமல் எடுத்துச் சொல்ல முடியாது. அவருக்குக் கிருஷ்ணபகவான் உயிர் நண்பர். ஒருசமயத்தில் அவர் கிருஷ்ணரைப் பார்க்கப் போனபொழுது தம் சக்திக்குத் தக்கவண்ணம் கொஞ்சம் அவல் இடித்து அதனைத் தமது கந்தைத் துணியில் முடிந்துகொண்டு சென்று அவருக்குக் கொடுத்துவந்தாரே யல்லாமல் அவரிடத்தில் தமது தரித்திரத்தைச் சிறிதும் வெளிப்படுத்தவில்லை. தமக்குள்ள கஷ்டங்களைச் சொல்லி அவரை ஏதேனும் கேட்கவும் இல்லை. தமது தரித்திரத்தை வெளியிட்டுக்கொள்வது தம் பெருமைக்குக் குறைவு என்றே அவர் தீர்மானித்து வெறுமனே வீட்டுக்குத் திரும்பினார். ஆதலால், நாமும் அவரைப்போல நண்பனிடத்திலும் நமது அந்தரங்கமான சிறுமைகளைச் சொல்லலாகாது. மகாபாரதம்.

தோழ னோடும் ஏழைமை பேசேல்.

தோழனோடும்-சிநேகிதனோடும், ஏழைமை (உனக்கிருக்கின்ற) சிறுமையை, பேசேல்-(எப்படிப்பட்ட சமயத்திலும்) பேசாதே.

48. 34-வது கதையில் கர்ணனைப்பற்றித் தெரிந்திருக்கிறீர்கள். அவன் தருமம் தெரிந்தவன். சாஸ்திரங்களை நன்றாகக் கற்றவன். பெரியவர்களுக்குப் பணிவிடை புரிந்தவன். நல்லொழுக்கத்தை அணிகலமாக அடைந்தவன். இல்லையென்னாமல் கொடுப்பதிற் சிறந்தவன். இவ்வளவு சிறப்புக்கள் இருந்தும் அவன் மிகவும் கொடியவனாகிய துரியோதனன் நட்பினால் அனைவராலும் வெறுக்கப்பட்டான். அநநட்பினாலேயே சில சமயங்களில் அவமானத்தையும் அடைந்திருக்கிறான். அத்தீ நட்பின் பயனாகப் பின்னொரு சமயத்தில் அவனுக்கு மரணமும் சொநதமாயிற்று. ஆதலால், துஷ்டர்களின் நட்பு எப்பொழுதும் தீங்கையே உண்டுபண்ணும். மகாபாரதம்.

நல் லிணக்க மல்ல தல்லற் படுத்தும்.

நல்லிணக்கம் அல்லது - நல்ல சகவாசம் அல்லாதது, அல்லல்-துன்பத்தை, படுத்தும் - செய்பவனுக்கு (எப்போதும்) உண்டாக்கும்.

---

49. 21-வது கதையில் விசுவாமித்திர முனிவரைப் பற்றிச் சிறிது அறிந்திருக்கிறீர்கள். அவர் ஒருசமயத்தில் நூற்றுக்கணக்கான வருஷங்கள் வரையில் ஒரே நிலையாக நின்று வனத்தில் தவஞ்செய்து வந்தார். அப்பொழுது உலகத்தில் பெரும்பஞ்சம பரவிப் பிடித்து வந்தது. உணவு கிடைக்காமல் எளியவர்களை வலியவர் அடித்துத் தின்னத் தொடங்கினார்கள். முனிவர் தவம் கலைந்து எழுந்த மாத்திரத்தில் அவருக்குப் பசி அதிகமாக வளரவாரம்பித்தது. அவர் உணவுக்காகக் காடுமுழுவதும் அலைந்து திரிகையில் ஒரு வேடன் தான் வளர்த்துவநத நாயைக் கொன்று அதனை நெருப்பில் வதக்கி, மூர்ச்சை போன மனைவியை எழுப்பிக்கொண் டிருந்தான். விசுவாமித்திரர் பசியின்

கொடுமையினால் மெள்ளப் புகுந்து அவன் அறியாமல் அம் மாமிசத்தை எடுத்தார். வேடன் அதனை அறிந்து உடனே அவரைத் துரத்த ஆரம்பித்தான். அவர் சற்று இடையில் நின்று யோசித்து அவ்வளவும் பஞ்சத்தினால் வந்த பெருங் கேடென்று தெரிந்து மாமிசத்தை அவனிடம் கொடுத்து விட்டுத் தவத்தினால் உடனே மழை பொழியப் பண்ணி நாட்டுக்கு நல்ல செழிப்பை உண்டாக்கினார். ஆதலால், நாடு முழுவதும் செழித்திருந்தால் எவருக்கும் துன்பம் உண்டாகமாட்டாது. மகாபாரதம்.

நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை.

நாடு எங்கும் - தேசம் எங்கும், வாழ - செழித்திருக்க, கேடு ஒன்றும், இல்லை-(பஞ்சம் திருடு முதலான) கேடுகள் ஒன்றும் உண்டாவதில்லை.



50. சிலகாலத்துக்கு முன்னர்த் தாரா நகரத்தில் போஜராஜன் என்று மிகுந்த கீர்த்தி பெற்ற அரசன் ஒருவன் இருந்தான். அவன் சபையில் இருந்த பண்டிதர்களில் காளிதாசன் என்பவன் முதன்மையானவன். அவன் எல்லாப் பண்டிதர்களுக்கும் தலைமைபெற்று வடமொழியில் சிறந்த கவிகளையும் உயர்ந்த காவியங்களையும் செய்தான் அவன் சொல் ஒன்றாவது பழுதுபட்டதில்லை. சொல்லியது சொல்லியவண்ணம் அப்படி யப்படியே நடந்துகொண்டிருந்தது. அவன் சொல்கின்றவற்றை யெல்லாம் சரசுவதி தேவி உண்மையாக்கிக்கொண்டு வந்தாள். அவன் கவி, படிப்பவர்களுக்கு இன்பமாயிருக்கும். சாகுந்தலம், இரகுவம்சம், மேகசந்தேசம் முதலான பிரசித்திபெற்ற நூல்கள் யாவும் அவன் செய்தவையே யாகும். ஆதலால், நன்றாய்க் கற்ற காளிதாசனைப் போன்ற வரகவிகளின் சொல் ஒருபொழுதும் தவறமாட்டாது. போஜ சரித்திரம்.

நிற்கக் கற்றல் சொல்திறம் பாமை.

*நிற்கக் கற்றல்-(தன்னிடத்து அறிவு) நிலைபெறக் கற்றலாவது, சொல்-(தான் சொல்லும்) சொற்கள், திறம்பாமை-(ஒருபோதும்) தப்பிப் போகாமையாகும்.*



51. சோழநாட்டில் குண்டையூர் என்று ஒரு ஊர் உண்டு. அதில் குண்டையூர்க் கிழார் என்ற பெயரோடு வேளாளர் ஒருவர் இருந்தார். அவ்வூர் நல்ல நீர்வளமும் நிலவளமும் கொண்டது. கிழார் காலம் அறிந்து நன்றாகப் பயிர்செய்து வருஷந்தோறும் மிகுதியான நெல்லை உற்பத்தி செய்துவருவார். சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்த அந்தக் குண்டையூர்க் கிழார் சுந்தரமூர்த்தி நாயனுருக்கும் அவரைச் சேர்ந்த திருத்தொண்டர்களுக்கும் வேண்டுமான நெல்லை விருப்பத்தோடு கொடுத்துக் கொண்டு வந்தார். அவருடைய நெல் கொடையைச் சுந்தரமூர்த்தி நாயனுரும் 'நீள நினைந்து' என்னும் தேவாரத்தில் புகழ்ந்துசொல்லி யிருக்கிறுர். அந்தக் கிழார் நீர்வளமில்லாத ஊரில் இருந்திருந்தால், அவ்வளவு உயர்ந்த தருமத்தைச் செய்திருக்க முடியாதல்லவா ? ஆதலால், நாமும் அவரைப்போல எப்பொழுதும் நீர்வளம் பொருந்திய கிராமத்தில் இருந்து பிறரை உண்பித்து வரவேண்டும்.

தேவாரம்.

நீரகம் பொருந்திய வூரகத் திரு.

*நீர்-நீர்வளம், அகம் பொருந்திய-தனக்குள்ளே யமைந்த, ஊர் அகத்து—ஊரில், இரு-(நீ) குடியிரு.*



52. கிருஷ்ணதேவ ராயர் அரசுபுரிந்த காலத்தில் அவரிடத்தில் அப்பாஜி என்று ஒரு மந்திரி இருந்தான். அவன் அறிவிலும் ஆண்மையிலும் உயர்ந்தவன். அவன்

அறிவைப் பரிக்ஷிக்கும் பொருட்டுப் பகையரசன் ஒருவன் சிங்கம் ஒன்று செய்து அதனை ஒரு பெரிய கண்ணாடிக் கூட்டில் வைத்துப் பூட்டி இராயரிடம் அனுப்பினான். 'பூட்டைத் திறவாமல் என்னை ஓட்டவேண்டும்' என்று சிங்கத்தின் வாயில் ஒரு கடிதம் இருந்தது. எல்லா மந்திரிகளும் அதனைக் கண்டு முடியாதென்று சொல்லி யனுப்பி விட்டார்கள். அப்பாஜி அக்கூட்டை நன்றாகப் பரிக்ஷித்து அதன் கீழ்ச் சிறிய துவாரம் ஒன்று இருப்பதை யறிந்து அதன்வழியாக ஒரு குச்சியைக் கொளுத்தி உள்ளே போட்டான். அச் சிங்கம் மெழுகாலும குங்கிலியத்தாலும் செய்யப்பட்டிருந்தபடியினால் உடனே உருகிப்போயிற்று. அப்பாஜியின் அறிவைக்கண்டு அனைவரும் ஆச்சரியப்பட்டார்கள். ஆகையால், அற்பமான காரியமாக இருந்தாலும் அவனைப் போலவே அனைவரும் ஆராய்ந்து நிர்மானிக்கவேண்டும்.

அப்பாஜி கதை.

நுண்ணிய கருமமும் எண்ணித் துணி.

நுண்ணிய - (மிகவும்) சிறிய, கருமமும் – தொழில்களையும், எண்ணி-(முடிக்கும் வழியை நன்றாக) ஆலோசித்து, துணி-(பின்பு) அவைகளைச் செய்யத்) துணி.



53. முற்காலத்தில் மிதிலைப் பட்டணத்தில் தருமவியாதன் என்று ஒரு வேடன் இருந்தான். அவன் எல்லாச் சாஸ்திரங்களையும் குறைவில்லாமல் கற்றவன். உண்மை ஞானத்தில் உயர்ந்தவன். அவன் ஞானம் உலகத்தில் பிரசித்தமானது. அவ்வளவு தெரிந்தவனாக இருந்துங் கூட அவன் தன் குலாசாரத்தின் வண்ணம் மாமிசக்கடை வைத்து அதில்வரும் இலாபத்தினால் வயது சென்ற தன் தாய் தந்தைகளைக் கொஞ்சமும் குறைவில்லாமல் காப்பாற்றிக்கொண்டு வந்தான். முனிவர் யாவரும் அவனை

ஒழுக்கத்தைக் கண்டு சந்தோஷப்பட்டார்கள். ஆதலால், நாமும் தரும வியாதனைப்போல நூல்களைப் படித்தறிந்து நல்லொழுக்கத்தில் நிற்கவேண்டும். மகாபாரதம்.

## நூன்முறை தெரிந்து சீலத் தொழுகு.

*நூல்-(மனு முதலிய நூல்களிற் சொல்லப்பட்ட, முறை-(விதியின்) முறையை, தெரிந்து-அறிந்து, சீலத்து - நல்லொழுக்க வழியில், ஒழுகு-(நீ) நட.*



54. சீதையை இராவணன் சிறையெடுத்துக்கொண்டு போனதன்பொருட்டு இலங்கைப் பட்டினத்தில் இராமனுக்கும் இராவணனுக்கும் கடுஞ்சண்டை நடந்ததென்று 15-வது கதை உங்களுக்குத தெரிவித்திருக்கிறது. அந்த யுத்தத்தில் இராவணனும் அவனைச் சேர்ந்தவர்களும் இராமபாணத்தினுல் இறந்துபோனுர்கள். பின்னர்ச் சீதை இராமனிடத்துக்கு அழைத்துவரப்பட்டாள். ஆனுலும், இராமன் அவளை அங்கீகரிக்கவில்லை. அவன் 'ஜானகி! என் கடமையை நான் செய்து முடித்தேன்; உன் உண்மைக் கற்பை விளக்கும் வழியில் விளக்கிக் காட்டுக' என்று சொல்லி வாயை மூடிக்கொண்டான். உடனே சீதை இலக்ஷ்மணனைத் தீ மூட்டச்செய்து 'நான் குற்றமற்றவள்; என் ஒழுக்கம் பரிசுத்தமானது; என் மனச்சாக்ஷிக்கு விரோதமாக நான் ஒன்றையும் செய்ததில்லை. குற்றமுள்ளவளானுல் இந்நெருப்பு என்னை உடனே எரித்துக்கொன்றுவிடட்டும்' என்று சொல்லிச் சந்தோஷமாக அத்தீயில் இறங்கினுள். நெருப்பு அவளை ஒன்றும் பண்ணவில்லை. தாமரைக்குளத்தைக் காட்டிலும் தண்மைகொண்டு விளங்கிற்று. ஆதலால், ஒருவருக்குத் தம் மனமறியாத வஞ்சனை ஒன்றும் இருக்கமாட்டாது. இராமாயணம்.

## நெஞ்சை ஒளித்தோரு வஞ்சகம் இல்லை.

நெஞ்சை-(தன்) மனத்தை, ஒளித்து-அறியாமல் உண்டா கின்ற, ஒரு வஞ்சகம்-ஒரு (விதமான) வஞ்சனையும், இல்லை— (ஒருவரிடத்திலும்) இல்லை.

55. கிருஷ்ணன் பாண்டவர்சகாயன் என்பதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். பாண்டவர் ஐந்துபேருக் குள்ளும் அருச்சுனனிடத்தில்தான் கிருஷ்ணன் அதிக மாகப் பழகிவருவான். ஒருசமயத்தில் அர்ச்சுனனும் கிருஷ்ணனும் கைலாயத்துக்குச் சென்றார்கள். அங்குச் சில வேலைக்காரர் பண்டிகளில் *நிர்மாலிய மலர்களை ஏற்றி வந்து ஒரு பள்ளத்தில் கொட்டிக்கொண் டிருந்தனர். அர்ச்சுனன் அவர்களைக் கண்டு 'இவை யார் செய்யும் பூஜைப் பூக்கள்' என்று கேட்டான். அவர்கள் 'பாண்ட வர்களில் பீமன் என்பவன் செய்யும் மானஸ பூஜை இது; அவன் நாள்தோறும் இருபத்தைந்து பண்டி மலர்களைக் கடவுளுக்கு அர்ச்சனை பண்ணிவருகிறான்' என்றார்கள். அர்ச்சுனன் கருவத்தினால் 'பாண்டவர்களில் அர்ச் சுனன் என்பவன் அருச்சிக்கும் மலர்கள் எங்கே?' என்று வினவினான். அப்பரிசாரகர் 'ஐயா! அவன் பூஜை ஆடம்பர மானது ; அஃது அரைக்கூடை மலருக்கும் குறைவாகவே யிருக்கும். அதுவும் ஒவ்வொரு நாளைக்குத்தான் உண்டு' என்று சொல்லிப் போய்விட்டார்கள். அர்ச்சுனன் அவ் வார்த்தைகளைக் கேட்டு அதிக வெட்கமடைந்தான். ஆத லால், மனத்தை வெளியில் செல்லவிட்டு ஆடம்பரமாகப் பூஜைசெய்வது சிறப்படையாதென்பதை இந்தக் கதை நமக்குத் தெரிவிக்கின்றது. மகாபாரதம்

* நிர்மாலிய மலர்—கடவுளுக்குப் பூசைசெய்த மலர்.

## நேரா நோன்பு சீரா காது.

நேரா-(மனத்தைச் சரியானவழியில்) நிறுத்தாமற்செயயும், நோன்பு-விரதமானது, சீர் ஆகாது-சீராக மாட்டாது.

56. 18, 24, 25-வது கதைகள் துரியோதனன் கெட்ட எண்ணங்களை நமக்கு நன்றாக வெளிப்படுத்துகின்றன. பாண்டவர்களுடைய பெருஞ் செல்வத்தைக் கண்டு பொறாமைகொண்ட துரியோதனன், அச்செல்வத்தை அபகரிக்க எண்ணித் தன்மாமன் சகுனியைக்கொண்டு சூதாடுவித்தான். அவ்வாட்டத்தில் பாண்டவர் தங்கள் நாடு நகரங்களை இழந்து தாங்களும் துரியோதனனுக்கு அடிமையானார்கள். துரியோதனன் அவ்வுரிமையினால் அவர்கள் மனைவியான பாஞ்சாலியைச் சபையில் அழைத்து வந்து மானபங்கம் பண்ணும் வண்ணம் தன் சகோதரன் துச்சாதனனுக்குக் கட்டளையிட்டான். பாஞ்சாலி அதனைக் கடவுள் அநுக்கிரகத்தினால் மிகவும் எளிதில் நீக்கிக் கொண்டுவிட்டாள். பின்னர்த் துரியோதனன் 'பாஞ்சாலியை என் வலத்துடையில் உட்காருவி' என்று சகோதரனுக்குச் சொன்னான். பாஞ்சாலி அதற்குக் கோபித்துத் 'துஷ்டா! நீ எனக்கு இருப்பதற்கு இடங்காட்டின உன் துடை முரிந்து மரணமடையக்கடவாய்' என்று சபித்தாள். பதிவிரதையின் சாபத்தினால் முடிவில் அந்தத் துஷ்டன் அப்படியே இறந்துபோனான். அவனைப்போல நாமும் நமக்கு அடங்கினவர் என்று பிறர் மனம் வருந்தும் வண்ணம் பேசலாகாது. மகாபாரதம்.

## நைபவ ரெனினும் நொய்ய வுரையேல்.

நைபவர் எனினும்-(கேட்பவர் எதிர் பேசாமல்) வருந்துவோரானாலும், நொய்ய - அற்பமாகிய சொற்களை, உரையேல் - (நீ) சொல்லாதே.

57. முற்காலத்தில் இருந்த இராவணன் தனது திக்குவிஜயத்தில் குபேரனை வென்று அவனிடம் இருந்த புஷ்பக விமானத்தைக் கைப்பற்றி அதில் ஏறிக்கொண்டு வந்தான். அவ்விமானம் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் கைலாயமலைக்கு நேராக ஆகாயத்தில் வருகையில் செல்லமுடியாமல் தடைபட்டு நின்று விட்டது. இராவணன் அதன் காரணத்தை ஆராயும்பொழுது நந்திதேவர் என்பவர் எதிரில் தோன்றி 'இராவணா! இங்கு எவரும் விமானத்தில் வரலாகாது; இது கடவுள் இருக்குமிடம்; ஆதலாற்றான் உன் விமானம் நின்றுபோயிற்று' என்று சொன்னார். இராவணன் 'புத்தியில்லாத குரங்கே! நீ சற்றும் அடக்கமில்லாமல் எனக்கு உபதேசம் செய்ய வந்தாய்; நீ யார்? எனக்கு உன் உபதேசம் வேண்டியதில்லை: நீ உன் வேலையைப் பார்!" என்று இகழ்ந்து பேசினான். அதனால், நந்திதேவர் கோபங்கொண்டு 'துஷ்டனே! உன் பட்டணமும் உன் குலமும் குரங்கினாலேயே அழிந்துபோகட்டும்' என்று சாபம் கொடுத்தார். பின்னொரு சமயத்தில் அவன் பட்டணமும் அவன் வம்சமும் சுக்கிரீவன் அநுமான் முதலிய குரங்கு வீரர்களினால் அப்படியே அழிந்துபோயின. ஆதலால், முதலில் அற்பமானவர்களாகக் காணப்படுகின்றவர்களே சமயம் வந்தபொழுது மிகவும் கொடியவராவார்கள். உத்தரகாண்டம்.

**நோய்யவ ரேன்பவர் வெய்யவ ராவர்.**

நொய்யவர் என்பவர் - (உருவத்தால்) அற்பமானவரென்று இகழப்பட்டவர்களும், வெய்யவர் ஆவர்-(சமயம் சேர்ந்தபொழுது) கொடியவராவார்கள்.



58. முன்னொருகாலத்தில் சங்கசூடன் என்ற பாம்பு கருடனுக்கு உணவாகும்படி நேரிட்டது. ஜீமூதவாகன்

என்னும் அரசகுமாரன் அந்தப் பாம்பின் தாய் படும் வருத்தத்தைக் கண்டு அவனுக்குப் பதில் தான் கருடனுக்கு உணவாகச் சென்றான். ஜீமூதவாகன் அப்பொழுது அணிந்து கொண்டிருந்த போர்வையினால் கருடன் அவனைப் பாம்பென்றே நினைத்து வழக்கம்போலக் கொத்திப் புசிக்கத் தொடங்கினான். ஜீமூதவாகன் கொஞ்சமாவது வருத்தப்படாமல் தன் உடம்பிலுள்ள எல்லா மாமிச பாகங்களையும் கருடன் எளிதில் உண்பதற்குச் சந்தோஷமாகத் திருப்பித் திருப்பிக் காண்பித்துக்கொண் டிருந்தான். அவனது அந்தச் செய்கையினால் கருடனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. அவன் உண்பதை நிறுத்திச் சற்று ஆலோசித்து உண்மைதெரிந்து 'தன்னை மன்னிக்க வேண்டும்' என்று ஜீமூதவாகனை வணங்கி 'உனக்கு இஷ்டமான வரத்தைக் கேள். தருகிறேன்' என்று சொன்னான். ஜீமூதவாகன் 'இனி உயிருள்ள பாம்புகளைத் தின்னாதே; அதுதான் எனக்கு இஷ்டமான வரம்' என்று அவனிடத்தில் வரம் பெற்றுக்கொண்டதல்லாமல், அவனால் முன்பு இறந்துபோன எல்லாப் பாம்புகளையும் கூட அமிருதத்தைப் பொழிந்து அவனையே எழுப்பித் தரச்செய்து பாம்புக் கூட்டங்களுக்குப் பெரிய சந்தோஷத்தை உண்டு பண்ணினான். ஆதலால், பிறவுயிர்களுக்குத் தீங்கு செய்யாமல் இருப்பதுவே ஒருவனுக்கு உயர்ந்த விரதமாகும்.

நாகாநந்தம்.

## நோன் பென்பது கொன்று தின்னாமை.

நோன்பு என்பது-தவமென்று சொல்லப்படுவது, கொன்று தின்னாமை (ஒருஜீவனை) வதைசெய்து (அதன் மாமிசத்தைத்) தின்னாமையாகும்.



59. 18-வது கதை திருதராஷ்டிரன் என்பவனைப் பற்றி உங்களுக்கு ஒருவாறு தெரிவித்திருக்கின்றது. அத் திருதராஷ்டிரன் அஸ்தினபுரத்துக்கு அரசன். அவன் புத்திரர்களான துரியோதனன் முதலான நூறுபெயரும் சிறுபிராயந் தொடங்கிப் பாண்டவர்களுக்குக் கெடுதி விளைக்க ஆரம்பித்து அவர்களுக்கு அளவில்லாத வஞ்சனைகளைச் செய்துவந்தார்கள். உலகத்தில் ஒருவராவது அவர்களை நல்லவர்களென்று சொன்னதில்லை. அனைவரும் 'சீ. துஷ்டர்! துஷ்டர்' என்றே வெறுத்துவர தலைப்பட்டனர். திருதராஷ்டிர மன்னவன் நல்ல தவம் செய்திருந்தால், அவனுக்கு நல்ல புத்திரர் பிறந்திருப்பார்கள். அவன் புண்ணியக் குறைவு புத்திரர்களைக் கெட்டவர்களாக்கிற்று. அவனும் அவர்களால் கடைசிவரையில் மனவருத்தப்பட்டு இறந்தான். ஆதலால், ஒருவனுக்குப் பிறக்கும் புத்திரர்களினால் அவன் புண்ணியம் எளிதில் வெளியாகும்.

பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்.

பண்ணிய-(ஒருவன்) செய்த, பயிரில்-பயிரின் (விளைவினாலும் விளைவில்லாமையாலும்), புண்ணியம்-(அவனிடத்துப்) புண்ணியம் (இருக்கின்றதும் இல்லாமையும்), தெரியும்-அறியப்படும்.



60. முன்னொரு காலத்தில் சுவேதகியென்ற அரசன் ஒருவன் இருந்தான். அவன் பன்னிரண்டு வருஷம் வரையில் இரவும் பகலும் விடாமல் நடத்தவேண்டிய ஒரு பெரிய யாகத்தைச் செய்ய ஆரம்பித்தான். யானைத் துதிக்கையிலிருந்து தண்ணீர் சொரிவதுபோலப் பசுவின் நெய்யை இடைவிடாமல் சொரிந்து அவ்வியாகம் அதிக ஆடம்பரத்தோடு நடத்தப்பட்டது. விதம் விதமான தின்பண்டங்கள் அப்பொழு தப்பொழுது அக்கினியில் ஆஹுதி யிடப்பட்டன. அக்னிதேவன் எல்லாவற்றையும்

வாங்கிவாங்கி வயிறு புடைக்கத் தின்றுகொண்டுவந்தான். அந்தப்பன்னிரண்டு வருஷத்திலும் அவனுக்கு உண்பதைத் தவிர இரவிலும் பகலிலும் வேறு வேலை கிடையாது. அதனால் அவனுக்கு அப்புறம் அஜீர்ணமும் வயிற்றுவலியும் உண்டாயின. அவன் புழுப்போலத் துடித்து வருந்தத் தொடங்கினன். அந்நோய் எந்த வைத்தியத்தினாலும் குணமடையவில்லை. பிற்பாடு, தெய்வ வைத்தியர்கள் "இந்திரனுக்குச் சொந்தமான காண்டவவனத்தில் உயர்ந்த மருந்துகள் வளர்ந்திருக்கின்றன. நீ அவ்வனத்தை உண்டால் உன்நோய் நீங்கிச் சுகமடைகுவாய்" என்று சொன்னார்கள். அக்னிதேவன் அவ்வனத்தைத் தனக்கு உணவாக்க வேண்டுமென்று அர்ச்சுனனிடம அந்தணவேஷத்தோடு வந்து யாசித்து அர்ச்சுனன் உதவியினால் அவ்வனத்தை உண்டு நோய் தீர்ந்தான். ஆதலால், உயர்ந்த உணவாக இருந்தாலும் ஒருவன் உண்ணத்தகும் காலத்தையும் அளவையும் அறிந்து உண்ணவேண்டும்.

மகாபாரதம்.

பாலே டாயினும் காலம் அறிந்துண்.

பால் ஏடாயினும்-பாலடைக் கட்டியாக இருந்தாலும், காலம் அறிந்து-(உண்ணத்தகும) காலத்தை அறிந்து, உண் (நீ) உண்ணு.



61. * * * * *

62. முன்னர்ப் பாடலிபுரத்தில் ஓரந்தணச் சிறுவன் இருந்தான். அவன் பலத்தில் உயர்ந்தவன். ஒருநாள் அரசனுடைய பட்டத்து யானை இடுக்குவழி யொன்றில் தண்ணீருக்குச் சென்றுகொண் டிருந்தது. அந்தவழியில் வந்த அந்தணச் சிறுவன் யானையின் வாலைப் பிடித்துப் பரபரவென்று இழுத்து அதனை அப்பால் தள்ளிவிட்டுத் தன்வழியிற் சென்றான். அந்த அற்புதத்தை அரசனும்

மந்திரியும் தற்செயலாகக் கண்டு ஆச்சரியமடைந்தார்கள். அப்பொழுது அரசன் மந்திரியை அவன் பலத்துக்குக் காரணம் கேட்டான். மந்திரி 'மகாராஜாவே! அவன் தன்னுடைய ஆறும்பிராயம் வரையில் விசாரமில்லாமல் தாய்ப்பாலை உண்டு வளர்ந்தபடியினால், அதிகபலத்தை அடைந்திருக்கிறான்' என்று சொல்லி அச்சிறுவனை அழைத்துத் தன் வசனத்தை ருஜுப்படுத்தினான். ஆதலால், விசாரமில்லாமல் தாய்ப்பாலை உண்டுவளர்ந்தவன் அதிகமான பாரத்தைச் சுமப்பான். கதாசரித்சாகரம்.

பீரம் பேணின் பாரம் தாங்கும்.

பீரம்பேணின் - ஒருவன் தாய்ப்பாலைக் (குறைவில்லாமல்) உண்டு வளர்ந்தால், பாரம் - பாரமான சுமையை, தாங்கும் சுமப்பான்.



63. ஆ. ஒருசமயத்தில் வசிஷ்டமுனிவர் தம்சிஷ்யனான ஹோதாஸன் என்பவனைக்கண்டு 'எனக்கு மாமிச போஜனம் வேண்டும்' என்று கேட்டார். அவன் 'தருகிறேன்' என்றுசொல்லி, நடுவழியில் தற்செயலாக எதிர்ப்பட்ட தன் மனைவியுடன் நெடும்பொழுது பேசிக்கொண்டிருந்து விட்டான். பின்னர்ச் சமையற்காரனைக் கண்டு 'நீ எப்படியாவது முனிவருக்கு மாமிசத்தோடு போஜனம் படைக்க வேண்டும்' என்றுசொன்னான். அப்பொழுது அகாலமாயிருந்த படியினால் அச்சமையற்காரன் அரண்மனையில் தூங்கிக்கொண்டிருந்த ஓரிளங் குழந்தையைக் கொன்று பக்குவமாகச் சமைத்து முனிவர்க்குப் படைத்தான். வசிஷ்டர் முதலில் கொஞ்சம் தின்று அப்புறம் அது நரமாமிசம் என்பதனை நன்றாக உணர்ந்து கோபித்து அவ்வரசனை நரமாமிசம் புசிக்கின்ற இராக்ஷதனாகும்வண்ணம் சபித்தார். அவ்வரசன் பின்பு கன்மாஷபாதன் என்னும்

பெயரோடு அவர் நூறுபுத்திரர்களையுமே கொன்று தின்று விட்டான். வசிஷ்டர் தபசியாகவிருந்தும் மாமிசத்தை விரும்பினபடியினால் தமது நூறுபுத்திரர்களையும் ஒருமிக்க இழந்து வருந்தலாயிற்று. ஆதலால், எவரும் மாமிச போஜனத்தை விரும்பலாகாது. மகாபாரதம்.

ந. தசரத சக்ரவர்த்தியைப்பற்றி 8-வது கதை உங்களுக்குத் தெரிவித்திருக்கின்றது. அவர் ஒரு சமயத்தில் காட்டில் வேட்டைக்குச் சென்று விலங்குகள் தண்ணீர் பருக வரும்பொழுது பதிவிருந்து கொல்லவேண்டும் என்று ஒரு குளக்கரையில் ஒளிந்துகொண் டிருந்தார். இராத்திரி பத்துநாழிகைக்குமேல் குளத்தில் ஒருவகைச சத்தம கேட்டது. சக்ரவர்த்தி அதனை விலங்கு தண்ணீர் பருகும் சத்தம் என்று தவறுக நினைந்து ஒருபாணத்தை இழுத்துவிடுத்தார். அது தண்ணீர் மொண்டுகொண்டிருந்த ஒரு முனிகுமாரன்மேற் பாய்ந்தபடியினால் அவன் கீழே விழுந்து அப்பொழுதே இறந்துபோய் விட்டான். அவனைப் பெற்றவர் பிறவிக் குருடர்கள். அவர்கள் தங்கள் மகன் இறந்த் செய்தி தெரிந்து 'அரசனே! நீயும் எங்கள் போலப் புத்திரசோகத்தினுல் இறக்கக்கடவாய்' என்று சக்ரவர்த்திக்குக் கடுஞ்சாபம் கொடுத்து இறந்து போனார்கள். மற்றொரு சமயத்தில் தசரத சக்ரவர்த்தி அச்சாபத்தினுலேயே இராமன் பிரிவினுல் மாணமடைந்தார். ஆதலால், ஜீவப் பிராணிகளை அநியாயமாகக் கொல்லலாகாது.

இராமாயணம்.

ங. தேவர்களில் வசுக்கள் என்பவர் ஒருவகையினர். அவர்களுடைய தொகை எட்டுக்கோடி. ஒவ்வொரு கோடிக்கும் ஒவ்வொரு தலைவருண்டு. அத்தலைவருக்குத் தான் அஷ்டவசுக்கள் என்று பெயர். அவர்கள் ஒருசம

பத்தில் ஒன்றுசேர்ந்து வசிஷ்ட முனிவரிடத்தி லிருந்த நந்தினியென்னும் காமதேநுவை இரவில்வந்து திருடிக் கொண்டு போனார்கள். வசிஷ்டமுனிவர் ஞானக்கண்ணி னால் அதனைத் தெரிந்து அவர்களைப் பூமியில் மனிதராகப் பிறக்கும்படி சபித்தார். அவர்கள் தேவர்களாக இருந் துங்கூடச் சாபத்தை நீக்கிக்கொள்ள முடியாமல் அங்ங னமே நிலத்தில் வந்து பிறந்தார்கள். ஆதலால், நாமும் பிறர்பொருளைத் திருடலாகாது. மகாபாரதம்.

## புலையும் கொலையும் களவும் தவிர்.

புலையும்-(அசுத்தமாகிய மாம்சமதின்னுதலையும்), கொலையும்-(ஜீவ) வதை செய்தலையும், களவும்-(பிறர்பொருளைத்) திருடுதலை யும், தவிர்-(நீ) செய்யாதிரு.



64. முன்னொரு காலத்தில் நளசக்ரவர்த்தி யென் பவர் புஷ்கரன் என்ற ஒரு சிற்றரசனோடு சூதாடித் தமது நாட்டையும் அரசையும் இழந்து மனைவி தமயந்தியுடன் வனத்துக்குப் புறப்பட்டுப்போனார். அப்பொழுது நகரத் துக் குடிகள் அரசனையும் அரசியையுங் கண்டு கண்ணீர் வடித்துக் கலங்கி அழுதார்கள். அற்ப புத்தியுள்ள புஷ் கரன் 'நளனுடன் எவரும் பேசலாகாது; அவனுக்கு எவ ரும் உதவி செய்யலாகாது. இவற்றை மீறுகின்றவர் கடு மையாகத் தண்டிக்கப்படுவார்' என்று பட்டணம் முழு வதும் பறை சாற்றுவித்தான். ஆதலால், புஷ்கரனைப் போன்ற அற்பபுத்தி யுள்ளவர்களுக்கு ஒருபொழுதும் உயர்ந்த வொழுக்கம் உண்டாகமாட்டாது. நைஷதம்.

## பூரியோர்க் கில்லை சீரிய வொழுக்கம்.

பூரியோருக்கு-கீழ்மக்களுக்கு, சீரிய-சிறப்பாகிய, ஒழுக்கம்-நடக்கையானது, இல்லை-(உண்டாதல்) இல்லை.

65. வெகுகாலத்திற்கு முன்னர் இரகூகணன் என்ற ஒரு அரசன் இருந்தான். அவன் ஒரு சமயம் பல்லக்கில் ஏறிச் சவாரிபோனான். பல்லக்குச் சுமப்பவர்கள் நடு வழியில் இருந்த ஜடபாதர் என்னும் மெய்ஞ்ஞானியைப் பிடித்துத் தங்களுடன் அரசன் பல்லக்கைச் சுமக்கச் செய்தார்கள். அவரும் மறுக்காமல் அப்படியே சுமந்து கொண்டு போனார். ஆனால், அவருக்கு மற்றவர்களுடன் சரியாக அடியெடுத்து வைத்து நடக்கமுடியவில்லை. எறும்பு முதலான சிற்றுயிர்கள் எங்குத் தமது காலின்கீழ் ஒருகால் அகப்பட்டு இறந்துபோகுமோ என்று நிலத்தை நோக்கிச் சென்றபடியினால் ஏறுமாறாக அடிவைத்து நடக்க நேரிட்டது. அதனால், அரசன் பல்லக்கை நிறுத்தப்பண்ணி மெய்ஞ்ஞானியைத தெரிந்துகொண்டு தன்னை மன்னிக்கும் வண்ணம் அவர் பாதத்தில் விழுந்து பலவாறு வேண்டினான். ஜடபாதர் ' தமக்குக் கொஞ்சமும் கோபம் உண்டாகவில்லை ' என்று சொல்லி, அவனுக்கு உண்மை ஞானத்தை உபதேசம் செய்துபோனார். அவரைப்போன்ற உண்மை ஞானிகள் ஒருவரிடத்தில் பகையையும் உறவையும் கொள்ளமாட்டார்கள். பாகவதம்.

பெற்றோர்க் கில்லை சுற்றமும் சினமும்.

பெற்றோர்க்கு-(உண்மை ஞானத்தைப்) பெற்றவர்களுக்கு, சுற்றமும் - உறவினர்மேல் ஆசையும், சினமும் - (மற்றவர்மேல்) வெறுப்பும், இல்லை-(உண்டாதல்) இல்லை.



66. 8, 15-வது கதைகளில் இராமன் சீதையோடும் லக்ஷ்மணனோடும் பதினான்கு வருஷம் வரையில் வனத்தில் வாசம்செய்யப் போனான் என்று படித்திருக்கிறீர்கள். அவர்கள் தண்டகவனத்தில் இருக்கும்பொழுது ஒருநாள் பொன்மயமான மான் ஒன்று அவர்கள் எதிரில் மேய்ந்து

68. 21, 49-வது கதைகளில் விசுவாமித்திர முனிவரைப்பற்றி அறிந்திருக்கிறீர்கள். அவர் ஒருசமயம் இந்திரசபையில் வசிஷ்டமுனிவருக்கு விரோதமாகத் தாம் செய்துகொண்ட சபதத்தைச் சாதிப்பதன் பொருட்டு அரிச்சந்திர மன்னவனுக்குப் பலவிதமான கஷ்டங்களை உண்டுபண்ணத் தொடங்கினார். அவர் கொடுமையினால் அந்த உண்மையரசன் சுடுகாடு காத்துப் பிணங்களையும் கொளுத்திக்கொண்டு வந்தான். குற்றமில்லாத அரிச்சந்திர மன்னவனுக்குக் கஷ்டங்களை உண்டுபண்ணின குற்றத்தினால், அவர் முடிவில் எல்லாத் தவங்களையும் இழந்து அனைவருக்கும் எதிரில் அவமானத்தை அடைந்தார். ஆதலால், நாமும் பிறருக்குத் தீங்கு தருகின்ற கெட்ட காரியம் எவற்றையும் செய்யாமல் விலக்கவேண்டும்.

*அரிச்சந்திர காவியம்.*

போல்லாங் கேன்பவை எல்லாம் தவிர்.

பொல்லாங்கு என்பவை - தீங்கு என்று சொல்லப்பட்டவையாகிய, எல்லாம்-எல்லாவற்றையும், தவிர்-(நீ எப்போதும்) செய்யாதிரு.



69. காஞ்சிபுரத்தில் தனபதி என்று ஒரு பணக்காரன் இருந்தான். அவன் 'ஏழைகள்தாம் வயிறு வளர்ப்பதற்கு அன்றாடம் வருந்தி வேலை செய்யவேண்டும். நமக்குச் செல்வம் திரண்டு கிடக்கின்றது. செல்வமுள்ளவர்கள் வேலைசெய்து உடம்பை வருத்தலாகாது' என்று அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பான். அவன் உண்பதுவும் உறங்குவதும் அல்லாமல் ஒரு வேலையும் செய்வதில்லை. எப்பொழுதும் சோம்பேறித் தனமாகவே இருந்து வரத் தொடங்கினான். அவன் மனைவி மிகுந்த குணவதி. ஒழுக்கமும் படிப்பும் ஒருமிக்கப் பெற்றவள். அவளுக்குப் புருஷன்

நடக்கை கொஞ்சமும் பிடிப்பதில்லை. அவனை நல்ல வழியில் திருப்புவதற்கு என்ன செய்யலாம் என்று அவள் இரவும் பகலும் எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள். தனபதிக்கு மனைவியின் மீது ஆசை அதிகம். அவன் ஒருநாள் மனைவியை நோக்கிச் 'சாப்பிட்டாயிற்ரு ?' என்று கேட்டான். அவள் 'ஆம், கொஞ்சம் பழையது சாப்பிட்டேன்' என்று விடை கூறினாள். தனபதி உடனே சமையற்காரனைக் கோபித்து 'நீ யஜமானிக்கு ஏன் பழைய சாப்பாடு போட்டாய்?' என்று வினவினான். அவன் 'இல்லை ஐயா! புதிய சாப்பாடுதான் சாப்பிட்டார்கள்' என்று விநயமாய்ச் சொன்னான். பிற்பாடு தனபதி தன் மனைவியை 'இந்த அற்பத்துக்கெல்லாம் நீ ஏன் பொய் சொல்லுகிறாய் ? பொய் சொல்வது மிகவும் கொடியது; நீ இந்த வீட்டுக்கு யஜமானி; எப்பொழுதும் உண்மையே பேசவேண்டும்' என்றுறினான். அம்மனைவி "அன்புள்ள தலைவரே! கோபியாதிருங்கள் ; தாங்கள் சம்பாதிப்பது எனக்குப் புதியதாகுமேயன்றி என் மாமனார் சம்பாதித்த பொருள் எனக்கு எப்படிப் புதியதாகும். நான் புதியது சாப்பிடும்படியான பாக்கியம் பண்ணவில்லை. அதனால் தான் பழையது சாப்பிட்டேன் என்று சொன்னேன்" என்றாள். அதனைக் கேட்டதும் தனபதி திடுக்கிட்டுப்போனான். அவனுக்குத் தன் மனைவியை நிமிர்ந்து நோக்கவாவது அன்றிப் பதில் சொல்லவாவது முடியவேயில்லை. ஒன்றும் சொல்லத் தோன்றாமல் மிகவும் வெட்கமடைந்து நிலத்தை நோக்கிக் கொண்டிருந்தான். அவன் அறிவு அன்றுமுதல் மாறிப் போயிற்று. அப்புறம் அவன் ஒரு நிமிஷத்தையும் வீணாகக் கழிக்காமல் உழைத்துப் பொருள்சம்பாதிக்கத் தொடங்கினான். ஆதலால், ஒவ்வொருவரும் முயற்சிசெய்து அதனால்

கிடைக்கும் சாப்பாட்டை உண்ணவேண்டு மென்பது வெளியாகின்றதல்லவா : கதாசரித் சாகரம்.

போனகம் என்பது தான்உழந் துண்டல்

*போனகம் என்பது-சாப்பாடென்று சொல்லப்படுவது, தான் உழந்து-தான் பிரயாசைப்பட்டுச் சம்பாதித்து, உண்டல்-உண்ணுத லாம்.*



70. *முன்பு சந்திரகுலத்தில் ரந்திதேவர் என்ற அரசர் ஒருவர் இருந்தார். அவர் தம்மை வந்து யாசித்த எளியவர்களுக்கு எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு வனத் துக்குத் தவம்செய்யச் சென்றார். அங்கு நாற்பத்தெட்டு நாட்கள்வரையில் பட்டினிகிடந்து முடிக்கக்கூடிய ஒரு விரதத்தை அரிதில் நிறைவேற்றிச் சாப்பிடப்போனார். அது மிகவும் சாதாரணமான எளிய சாப்பாடு. அச்சமயத் தில் ஒருவன் வந்து 'ஐயா பசி காதை அடைக்கின்றது ; கொஞ்சம் உணவு தாருங்கள்!" என்று கேட்டான். அவர் அவனுக்குப் பாதியைக்கொடுத்து 'உண்டுபோ!' என்று சொன்னார். பின்னர் மற்றொருவன் வந்து 'ஐயா! நான் சாப்பிட்டு மூன்றுநாளாயிற்று. கண்கள் பார்வை தெரிய வில்லை. இப்பொழுது கொஞ்சமாவது உணவில்லாவிட் டால் என் உயிர் பிரிந்துபோவது நிச்சயம்' என்று சொன் ஞன். ரந்திதேவர் அவனுக்கு இருந்தவற்றில் பாதியைக் கொடுத்தனுப்பினார். மூன்றாவது இளைத்த நாய் ஒன்று பசியால் வருந்தி அவர் சமீபத்தில் வந்து விழுந்துவிட்டது. ரந்திதேவர் தம்மிடம் மிகுந்திருந்த எல்லா வுணவையும் அதற்குக் கொடுத்து அதன் களைபைமாற்றித் தாம் சந் தோஷமாகத் தண்ணீரைப் பருகினார். உடனே கடவுள் அவர் உண்மை யன்பை வியந்து எதிராகி வந்து வேண்டிய வரங்களைக் கொடுத்து யறைந்தார். ஆதலால், நாமும்*

அவரைப்போல விருந்தினர்களுக்கு இல்லையென்னமல் அன்போடு கொடுத்து உண்ணவேண்டும். மகாபாரதம்.

மருந்தே யாயினும் விருந்தோ டுண்.

மருந்தே ஆயினும் - (நீ உண்பது கிடைத்தற்கரிய தேவாமிருதமே யானாலும், விருந்தோடு - (வந்த) விருந்தினர்களோடு (கூடி), உண்-உண்ணு.



71. 33-வது கதையில் யுவனுசுவன் என்ற மன்னவனுக்கு மாந்தாதா என்று ஒரு புத்திரன் பிறந்தான் என்று படித்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கலாம். அம்மாந்தாதாவின் காலத்தில் நாட்டில் மழை பெய்யாமல் ஒருசமயம் பெரும்பஞ்சம் பிடித்து வருத்தத் தொடங்கிற்று. அப்பொழுது நிலத்தில் பசுமையென்பதே கிடையாது. உணவில்லாமையால் உயிர்கள் யாவும் நாசமாயின. பிள்ளைகளின் கையில் உள்ளவற்றைத் தாய்மார்கள் பறித்துத் தின்னத் தொடங்கினர்கள். நாட்டில் எங்கு நோக்கினும் 'பசி! பசி!' என்ற கூக்குரலை யல்லாமல் வேறென்றும் கேட்கவில்லை. அப்பொழுது மாந்தாதா மன்னவன் போர்க்கோலம் பூண்டு மழை பொழிவிப்பதன் பொருட்டு அமராவதிக்குச் சென்று இந்திரனை எதிர்த்துச் சண்டை செய்யத் தொடங்கினன். அச் சண்டையில் இந்திரன் தோற்று ஒளித்துக்கொண்டதனல் அம்மன்னவன் சுவர்க்கத்திலிருந்த மேகங்களைப் பிடித்துவந்து உலகம் செழிக்கும்படி மழை பொழியச் செய்தான். பின்னர்ப் பஞ்சம் தெளிந்து அனைவரும் சுகப்பட்டார்கள். ஆதலால், மழையில்லாவிட்டால் உலகத்தில் ஒரு காரியமும் நடக்கமாட்டாது. பாகவதம்.

மாரி யல்லது காரிய மில்லை.

மாரி அல்லது-மழை பொழிந்தாலல்லாமல், காரியம்-(யாதொரு) காரியமும், இல்லை-(உலகத்தில்) நடப்பதில்

72. 43-வது கதை சூரபதுமனைப் பற்றித் தெரிவித்திருக்கிறது. தேவர்கள் அவன் தங்களுக்குச் செய்யும் உபத்திரவத்தைச் சகிக்கமுடியாமல் அவனைத் தொலைப்பதற்குச் சிவபெருமான் பார்வதியை மணந்து புத்திரனை உண்டாக்கித் தரவேண்டும் என்று ஆலோசனை செய்தார்கள். அப்பொழுது கடவுள் தாம் தக்ஷிணாமூர்த்தியாக நின்று சனகர் முதலான யோகிகளுக்கு ஞானயோகத்தைத் தெரிவித்துக்கொண்டிருந்தார். அவர் யோகம் கலைந்து வெளிப்படுவதற்காக அவர்கள் முதலில் மன்மதனை ஏவி அவர் யோகத்தைக் கலைத்தார்கள். அம்முயற்சியில் மன்மதன் இறந்துபோனான். பின்னர் அனைவரும் தங்கள் குறைகளை அவரிடம் விண்ணப்பம் செய்துகொள்ளக் கடவுள் 'உங்கள் விருப்பத்தின் வண்ணம் புத்திரனை உண்டு பண்ணிக் குறையை நீக்குகிறோம்' என்று திருவாய்மலர்ந்தனர். தேவர்கள் பின்னும் பலமான முயற்சிசெய்து அவரைப் பார்வதிதேவியை மணக்கச் செய்தனர். கடவுள் பார்வதிதேவியோடு அநேக வருஷகாலம் உல்லாசமாக இருந்துவரத் தொடங்கினர். தேவர்கள் அப்புறம் வாயுவை அனுப்பி அவர் உல்லாசத்தைக் கலைத்தார்கள். அதன் பொருட்டுப் பார்வதி கோபங்கொண்டு 'உங்களுக்குச் சந்ததியில்லாமற் போகட்டும்' என்று தேவர்களைச் சபித்தாள். பிற்பாடு, சுப்பிரமணியக் கடவுள் தோன்றினர். அவர் இளம்பருவ விளையாட்டினாலும் அவர்கள் அடைந்த கஷ்டம் அதிகம். கடைசியில்தான் அவர்கள் முயற்சிக்குப் பலன் கிடைத்தது. முடிவில் சுப்பிரமணியக் கடவுள் தெய்வப்படைகளைத் திரட்டிக்கொண்டு சென்று சூரபதுமனை எதிர்த்துப் பெருஞ்சண்டை செய்து அவனையும் அவன படைவீரர்களையும் கொன்று தேவர்களின் துன்

பத்தை ஒழித்தனர். ஆதலால், ஒருவன் செய்யும் முயற்சிக்கு அப்பொழுதே பலன் கிடைத்துவிடமாட்டாது. மின்னலுக்குப் பின்னர் மழை பொழிந்து உலகத்தைச் செழிக்கச் செய்வதுபோலப் பொறுத்துத்தான் கிடைக்கும்.

ஸ்காந்தம்.

## மின்னுக் கெல்லாம் பின்னுக்கு மழை.

மின்னுக்கு எல்லாம்-(வானத்திலே காணப்படுகின்ற) மின்னலுக்கெல்லாம், பின்னுக்கு-(அப்போது மழையில்லாமற்போனாலும் அதற்குப்) பின்னே, மழை-மழையுண்டாகும்.



73. இராவணனைப் பற்றி முன்வந்துள்ள சில கதைகள் நன்றாகத் தெரிவித்திருக்கின்றன. அவன் இலங்கைப் பட்டினத்தில் அதிகமான படைவீரர்களைத் துணைசேர்த்துக்கொண்டு சீதை காரணமாக இராமரோடு யுத்தம் பண்ணத் தொடங்கினான். அவன் புத்திரர்களும் படைத் தலைவர்களும் ஒருவர்பின் னொருவராக அச்சண்டையில் இறந்துபோனார்கள். முடிவில் ரணகளத்தில் இராவணனும் இராமபாணத்தால் அழிந்தான். யஜமானன் இறந்த பிற்பாடு அவன் படைவீரர் தங்களை நடத்துவாரில்லாமல் தலைவிரி கோலமாகச் சிதறி யோடத் தொடங்கினார்கள். எதிர்த்து நிற்பதற்கு அவர்களால் கொஞ்சமும் முடியாமல் போயிற்று. ஆதலால், நடத்தும் தலைவன் இல்லாவிட்டால், தொழில்செய்பவர் திரண்டிருந்தாலும் அவர்களால் ஒருவகைத் தொழிலும் நடந்தேறமாட்டாது.

இராமாயணம்.

## மீகாமன் இல்லா மரக்கலம் ஓடாது.

மீகாமன்-(தன்னை ஓட்டத்தக்க) மாலுமி, இல்லா-இல்லாத, மரக்கலம்-கப்பலானது, ஓடாது-(கடலில்) செல்லமாட்டாது.

74. நெடுங்காலத்துக்கு முன்னர் வனத்தில் மாண்டவியர் என்று ஒரு முனிவர் இருந்தார். அவர் தமது இளம்பிராயத்தில் தும்பிகளைப் பிடித்து அவற்றின் வால்களில் முட்களைச் செருகிவிட்டு விளையாடுவது வழக்கம். அந்தக் காலத்தில் அஃது அவருக்கு ஒரு விநோத விளையாட்டாக இருந்துவந்தது. வயது வந்தபிற்பாடு அவர் வேதங்களை ஓதினார். சாஸ்திரங்களைக் கற்றார். ஞானத்தை அடைந்தார். அப்புறம் வனத்தில் நின்று பல வருஷம் வரையில் கடுந்தவம் செய்தார். எவ்வளவு செய்தும் அவர் தமது இளம்பிராயத்தில் பண்ணின பாபத்தைப் போக்கிக் கொள்ள முடியவில்லை. மற்றொரு சமயத்தில் அவர் அந்தப் பாபம் காரணமாக நிர்நிமித்தமாய்த் திருட்டுக் குற்றத்துக்குட்பட்டு கழுவில் ஏற்றப்பட்டார். ஆதலால், நாம் விளையாட்டாகவும் பாபத்தைச் செய்யலாகாது. செய்தால், பின்னொருகாலத்தில் அதனை அநுபவித்தே தீரவேண்டும்.

மகாபாரதம்.

முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.

முன்பகல்-(ஒரு முகூர்த்தகாலத்தின்) முன் பங்கிலே, செய்யின்-(ஒருவன் பிறருக்குத் தீங்கு) செய்தால், பின்பகல்-(அதன்) பின் பங்கிலே, விளையும்-(செய்தவனுக்கு அத்தீங்கு தானே) உண்டாகும்.



75. முன்னொருகாலத்தில் உத்தானபாதன் என்று ஒரு அரசன் இருந்தான். அவனுக்குச் சுநீதி சுருசி என்று இரண்டு மனைவிகள். சுநீதியின் வயிற்றில் துருவன் என்பவனும் சுருசியின் வயிற்றில் உத்தமன் என்பவனும் பிறந்தார்கள். இளையமனைவி அரசன் அன்புக்குச் சொந்தமாயிருந்தபடியினால் அவள் புத்திரன் உத்தமனுக்கு அரசன் ஆதரவு அதிகமாகக் கிடைத்திருந்தது. ஒருநாள் உத்தமன்

உத்தானபாதன்மடியில் உட்கார்ந்திருக்கச், சுருசி அரசன் அருகில் நின்று பேசிக்கொண் டிருந்தாள். அப்பொழுது தற்செயலாக அங்குவந்த துருவன் உத்தமனைப்போலத் தானும் அரசன் மடியில் உட்கார விரும்பிச் சமீபம் சென்றான். அவ்வளவில் சுருசி முகம் கடுத்துச் 'சிறுவனே உனக்கு அரசர்மடியில் அமர யோக்கியதை இல்லை என்று சொல்லி அவ்விளைஞன் கரத்தைப் பிடித்துப் பரபர வென்று இழுத்து அப்புறம் தள்ளிவிட்டாள். துருவன் தன் மாற்றாந்தாய் சொல்லிய வார்த்தையைப் பொறுக்க முடியாமல் அப்பொழுதே புறப்பட்டு வனத்துக்குச் சென்றான். அங்கு அவனுக்கு என்னகாரியம் செய்தால் கடவுள் வந்து வரங்கொடுப்பார் என்பது விளங்கவில்லை. அச்சமயத்தில் அகஸ்தியர் ஆங்கிரசர் வசிஷ்டர் முதலான சப்தரிஷிகளும் அவனுக்குமுன் எதிர்ப்பட்டார்கள். துருவன் அவர்களை வணங்கித் தான் புறப்பட்டுவந்த காரியத்தைச் சொல்லி 'எப்படியாவது தாங்கள் எனக்கு அநுக்கிரகம் செய்யவேண்டும்' என்று வேண்டிக்கொண்டான். முனிவர்கள் அவன் விடாப்பிடியை உணர்ந்து 'சிறுவனே! நீ மேன்மையை அடைவாய்' என்று சொல்லி அஷ்டாக்ஷர மகாமந்திரத்தை உபதேசஞ் செய்து அம்மந்திரத்தை அநுஷ்டிக்கும் விதியையும் அவனுக்கு அறிவித்துச் சென்றார்கள். துருவன் அதனை உறுதியாகக் கொண்டு ஸ்ரீ மகாவிஷ்ணுவைத் தியானஞ் செய்து வந்தான். பிற்பாடு, அக் கடவுள் வெளிப்பட்டுவந்து எவருக்கும் கிடைக்கமுடியாத உத்தமமான துருவபதத்தை அவனுக்குச் சொந்தமாக்கி மறைந்தார். ஆதலால், பெரியவர்கள் வார்த்தை எச்சமயத்திலும் தேவாமிருதம்போலச் சிறப்புள்ளதா யிருக்கும். பாகவதம்.

மூத்தோர் சொல்லும் வார்த்தை அமிர்தம்.

*மூத்தோர்-பெரியவர், சொல்லும்-சொல்லுகின்ற, வார்த்தை-வசனமானது, அமிர்தம்-தேவாமிருதம் (போலச் சிறப்புள்ளதாயிருக்கும்.)*



76. *கதை இல்லை.*

மெத்தெனப் படுத்தல் நித்திரைக் கழகு.

*மெத்தென-மெத்தென்றிருக்கும் பஞ்சசயனத்தில், படுத்தல்-படுப்பதானது, நித்திரைக்கு-(ஒருவன் செய்யும்) நித்திரைக்கு, அழகு-அழகாகும்.*



77. *முற்காலத்தில் இளையான்குடி என்னும் ஊரில் மாறன் என்று ஒரு வேளாளர் இருந்தார். அவர் நாள்தோறும் உழுது பயிர்செய்து தன் வீட்டுக்குவரும் சிவனடியார்களுக்கு அன்புடன் அன்னம் அளித்துவந்தார். கடவுள் திருவுள்ளத்தின்வண்ணம் நாளடைவில் அவரைத் தரித்திரம் தொடரத் தொடங்கிற்று. சிலநாட்களில் அவர் தமது பொருள் எல்லாவற்றையும் இழந்துபோனார். அப்புறம் அவரும் அவர் மனைவியும் உணவில்லாமல் பட்டினி கிடந்து வருந்தும்படியும் நேர்ந்தது. அப்பொழுது ஒரு நாள் இரவில் ஓரடியவர் அவர் வீட்டுக்குவந்து 'ஐயா, மிகவும் பசிக்கின்றது கொஞ்சம் உணவுதாருங்கள்' என்று சொன்னார். விடாமழை பொழிகின்ற அவ்விரவில் அவ்வடியவர் உணவுக்கு வேறு ஒன்றும் வழி ஏற்படவில்லை. பின்பு மாறனார் மனைவி சொல்லிய யோசனையின் மேல் ஒரு கூடையை எடுத்துக்கொண்டு வயலுக்குச் சென்று, அன்று காலையில் நாற்று விடுவதற்குத் தெளித்துவந்திருந்த நெல்முளைகளைச் சேற்றோடு வாரிக்கொண்டுவந்து மனைவி கையில் கொடுத்தார். அவர் மனைவி அம்முளைகளை வறுத்*

துக் குற்றி அரிசியாக்கிச் சமைத்து அடியவருக்குப் பரிமாறினாள். பயிர்த்தொழில் செய்திராவிட்டால், அந்த அகாலத்தில் நெல் முளை அவருக்குக் கிடைத்திருக்க மாட்டாதல்லவா ? ஆதலால், பயிர்த்தொழில் ஒருவனைப் பஞ்சகாலத்திலும் குறைவில்லாமல் உண்பித்துக் கொண்டு வரும். பெரிய புராணம்.

மேழிச் செல்வம் கோழை படாது.

மேழி-மேழி (பிடித்து உழுது பயிர் செய்தலால் உண்டாகின்ற), செல்வம்-செல்வமானது, கோழை படாது-(எப்போதும்) குறைவடையாது.



79. 15-வது கதையினால் இராவணன் சீதையை எடுத்துச் சென்றது தெரியும். அவன் அங்ஙனம் எடுத்துச் செல்வதற்கு மாரீசன் என்பவனைத் தனக்குத் துணைசெய்ய வரும்படி வேண்டினான். மாரீசன் வயதிலும் அறிவிலும் உயர்ந்தவன். உலகானுபவத்திற் சிறந்தவன். அவன் இராவணா ! இராமனைச் சாதாரண மனிதன் என்று எண்ணாதே ; அவன் கடவுள் அவதாரம் ; அதனிலும் ஒப்புயர்வற்ற சூரன் ; அவன் பராக்கிரமத்தை நான் முன்னர் நன்றாகக் கண்டிருக்கிறேன்; இன்னும் அவன் நம் இனத்தாரைக் கொல்கிறேன் என்று சபதமும் செய்திருக்கிறான்; உன்னையும் உன் குலத்தையும் நீ உண்மையில் காக்க விரும்பினால் அவனுடைய அன்புள்ள மனைவியை அபகரித்து அவனைப் பகைத்துக் கொள்ளாதே ' என்று அவனுக்கும் பலவாறு புத்தி கூறினான். இராவணன் அவன் புத்தியைக் கேளாமல் அவனை மானாக்கி யனுப்பி இராம லக்ஷ்மணர்களை வேறு பிரித்துச் சீதையைத் தூக்கிக்கொண்டு இலங்கைப்பட்டினம் வந்து சேர்ந்தான். பின்னர் யுத்த சமயத்தில் விபீஷணனும் மாலியவான்

என்ற மந்திரியும் சீதையை விட்டுவிடும்படி அவனுக்குப் பலவிதமாகப் புத்தி சொன்னார்கள். அவன் அவற்றையும் கேட்கவில்லை. முடிவில், இராமனுடன் சண்டைசெய்து அவனால் அழிந்துபோய் விட்டான். ஆதலால், பெரிய மந்திரிகளின் ஆலோசனைகளை அசட்டை செய்து தொடங்கும் காரியம் எப்படிப்பட்ட அரசர்களுக்கும் அநுகூலமாகாது.
இராமாயணம்.

## 'மொழிவது மறுக்கின் அழிவது கருமம்.

மொழிவது-(கற்றோர்) சொல்லும் உபாயத்தை, மறுக்கின்-(ஒருவன்) கேளாமல் மறுத்தால், கருமம் - (அவன் செய்யும் தொழில், அழிவது-கெடுவதாகும்.



80. ஒரு சமயத்தில் நெடுங்காலம் வரையில் தவம் செய்துவந்த மூன்று முனிவர் தங்கள் யோகபலத்தினால் சுவர்க்கத்துக்குச் சென்றார்கள். அப்பொழுது ஆகாயத்தில் கருடவம்சத்துப் பறவை ஒன்று தன் அலகில் ஒரு பெரும்பாம்பைத் தூக்கிக்கொண்டு சென்றது. மூவரில் ஒருவர் அதனைக் கண்டு 'ஐயோ பாவம்! இந்தப் பாம்பு பறவையின் வாயில் அகப்பட்டு மிகவும் வருந்துகின்றது; இப்பறவைக்கு இவ்வளவு அக்கிரமம் ஆகாது' என்று சொன்னார். அவ்வார்த்தை முடிந்ததும் அவர் ஆகாயத்திற் செல்ல முடியாமல் நிலத்தில் விழுந்துவிட்டார். மற்றொருவர் பிறவுயிர்களைக் கடித்துக் கொல்லும் துஷ்டப் பிராணிக்குப் பரிந்து பேசினபடியினால் அவருக்கு அந்தத் தண்டனை கிடைத்ததென்று நினைத்துக் 'கொடும் பாம்புக்கு இந்தத் தண்டனை தகுதியானதுதான்' என்றார். உடனே அவரும் நிலத்தில் விழுந்துபோனார். கடைசிமுனிவர் 'கடவுள் படைப்பிலுள்ள விசித்திரங்களில் நாம் தலையிட்டுக்கொள்ளலாகாது. அவற்றைத் தீர்மானிக்கும்படியான உயர்ந்த

அறிவை அவர் நமக்குக் கொடுக்கவில்லை. உலகம் அவர் இஷ்டப்படி நடைபெறுகின்றது. நாம் எதற்கும் வாய் திறவாமல் மவுனமாக இருந்துவரவேண்டும்' என்று எண்ணிக்கொண்டு ஒன்றும் சொல்லாமல் சுவர்க்கம் போய்ச் சேர்ந்தார். இதனால், எல்லாவற்றையும் அறிந்து மவுனமாயிருப்பதுதான் உயர்ந்த ஞானத்துக்கு எல்லையென்று வெளியாகின்றது. மகாபாரதம்.

மோனம் என்பது ஞான வரம்பு.

மோனம் என்பது-மவுனநிலை யென்பது, ஞானம்-(தத்துவ) ஞானத்திற்கு, வரம்பு-எல்லையாகும்.

---

81. 44 வது கதையைப் படித்துக்கொள்க.

வளவன் ஆயினும் அளவறிந் தழித்துண்.

வளவன் ஆயினும்-(நீ செல்வத்தில்) சோழனுக்குப் ஒப்பானவனாக இருந்தாயானாலும், அளவு அறிந்து-(பொருள் வரவின்) அளவை அறிந்து, அழித்து-செலவுசெய்து, உண்-அநுபவி.

---

82. முற்காலத்தில் உஷஸ்தியென்று ஒரு அந்தணர் இருந்தார். அவர் சாமவேதத்தைப் பொருளுடன் நன்றாக ஓதி யுணர்ந்தவர். ஒழுக்கத்தில் மிகுந்தவர். ஒரு சமயத்தில் அவர் இருந்தநாட்டில் வருஷக்கணக்காக மழை பெய்யாமல் பஞ்சம் பரவி, வருத்திவந்தது. உணவில்லாமையினால் அதிக ஜனங்கள் பசியினால் வருந்தி இறந்துபோனார்கள். உஷஸ்தியும் அவர் மனைவியும் ஊர் ஊராகச் சென்று யாசகம் கேட்டார்கள். அங்குள்ளவர்கள் ' கொடுக்க முடியாதென்றும், கொடுப்பதற்கு இல்லையென்றும், நாங்களே பட்டினி கிடக்கிறோம் என்றும்' சொல்லிக் கதவை அடைத்துக்கொண்டு விட்டார்கள். அந்தணரும் அவர் மனைவியும் மிகவும் வருந்தி ஒரு யானைப்பாகனைக் கண்டு

எங்களுக்கு ஏதாவது கொஞ்சம் உணவுதருவாயா?' என்று வினவினார்கள். அந்தப்பாகன் 'ஐயா! சிறிது பயற்றுச் சுண்டல் இருக்கின்றது; அது யானையும் நானும் என்மனைவியும் தின்று மிகுந்த மிச்சம். அதனைத் தின்று உங்கள் முன் பசியை மாத்திரமாவது தணித்துக் கொள்ளுங்கள். ஆபத்துக்குப் பாபம் இல்லை' என்று சுண்டலைக் கொடுத்தான். அந்தணரும் அவர் மனைவியும் அச்சுண்டலைப் பெற்றுக் கொண்டு தின்று பசி நீங்கினார்கள். ஆதலால், மழை வளம் குறைந்தால் எல்லாத் தான தருமங்களும் உலகத்தில் குறைந்துபோகும். மகாபாரதம்.

வானம் சுருங்கின் தானம் சுருங்கும்.

வானம் - மழையானது, சுருங்கின் (பொழிவதில்) குறையுமானால், தானம்-நல்லவர்களுக்குக் கொடுக்கின்ற) கொடையும், சுருங்கும் - குறைவுபடும்.

83. ஆதிநாளில் திருச்செங்காட்டங்குடி என்ற ஊரில் சிறுத்தொண்டர் என்று ஒரு அடியவர் இருந்தார். அவர் நாள்தோறும் சிவனடியாருக்கு அன்னமிட்டு உண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். சில வருஷங்கள் வரையில் அவர் விரதம் குறைவில்லாமல் நன்றாக நடந்துவந்தது. அப்புறம் ஒருநாள் அவருக்கு ஒரு அடியவரும் அகப்படவில்லை. நெடுநேரம்வரையில் தேடித்திரிந்த பிற்பாடு விபூதி ருத்திராக்ஷங்களை அணிந்த முதிய அடியவர் ஒருவர் அவருக்குத் தென்பட்டனர். சிறுத்தொண்டர் அவரை வலம்வந்து பணிந்து 'ஐயா! இன்று அடியன் வீட்டில் அன்ன முண்பதற்கு அடிகள் எழுந்தருள வேண்டும்' என்று கூறினார். அவ்வடியார் 'ஐயா! தாங்கள் எனக்கு நரமாமிசத்துடன் அன்னம் அளிப்பதானால் வருவதற்குத் தடையில்லை' என்று சொன்னார். சிறுத்தொண்டர் சற்று

ஆலோசனைசெய்து 'ஐயா! எழுந்தருளுங்கள். அப்படியே அளிக்கிறேன்' என்று அவரை அழைத்துவந்து பாடசாலையில் படித்துக்கொண்டிருந்த சீராளன் என்னும் தமது ஒரேபுத்திரனைக் கொன்று மனைவி கையில் கொடுத்துப் பக்குவமாகச் சமைப்பித்து அவருக்குப் பரிமாறினார். உடனே அவ்வடியவர் திடீரென்று மறைந்து கடவுள் வடிவமாகத் தோன்றி அவரது இறந்த மகனை எழுப்பித் தந்ததுமன்றித் தமது உலகத்தையும் அவருக்குச் சொந்தமாக்கினார். ஆதலால், நல்லொழுக்க முள்ளவர்கள் விருந்தினர் விபரீதமானவற்றை விரும்பினும் அவர்களை வெறுக்கமாட்டார்கள். அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றி மகிழ்விப்பார்கள்.

பெரியபுராணம்.

விருந்திலோர்க் கில்லை திருந்திய வொழுக்கம்.

விருந்து இலோர்க்கு-விருந்தினர்களை (எதிர்கொண்டு) உபசரியாதவர்களுக்கு, திருந்திய-திருத்தமான, ஒழுக்கம்-இல்லறம், இல்லை-உண்டாதல் இல்லை.

84. குரங்குகளுக்குத் தலைவனாகிய வாலி என்பவன் கிஷ்கிந்தைப் பட்டணத்திற்குத் தலைவன். வரத்திலும் பலத்திலும் உயர்ந்தவன். அவன் தன்னை வெல்பவர் ஒருவரும் இல்லையென்று கர்வித்துத் தனது சகோதரனாகிய சுக்கிரீவன் மனைவியை அபகரித்து அவனையும் கொல்ல வகை தேடினான். சுக்கிரீவன் அவனை ஒன்றும் செய்ய முடியாமல் வனத்தில் மனைவியைப் பிரிந்து அவளைத் தேடித் திரிந்துவந்த இராமனைக் கண்டு அவர் சிநேகத்துக்குப் பாத்திரனாகித் தன் பகைவனை வாலியைக் கொன்று தன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று அவரைப் பிரார்த்தித்துக் கொண்டான். அவர் 'நண்பனே! உன் எண்ணப்படி வாலியை வதைத்து உனக்குக் கிஷ்கிந்தையை

யும் சொந்தமாக்குகிறேன்' என்று வாக்குத்தத்தம் பண்ணினார். பின்னர்ச் சுக்கிரீவன் எவராலும் வெல்ல முடியாத தன் சகோதரனைக் கொஞ்சமும் பொருள் செய்யாமல் அவனை வலுவிற் சென்று சண்டைக் கழைத்து இராமரைக்கொண்டு கொல்வித்தான். ஆதலால், உயர்ந்த சூரனுடைய நட்பு ஒருவனுக்குப் பகையை வெல்வதற்குக் கூரிய அம்புபோலப் பயன்படும். இராமாயணம்.

**வீரன் கேண்மை கூரம் பாகும்.**

*வீரன் - வீரனுடைய. கேண்மை - சிநேகமானது, கூர் அம்பாகும் - (பகையை வெல்வதற்குக்) கூரான அம்பாகும்.*

85. 21 வது கதையில் அரிச்சந்திர மகாராஜன் தனது நாடு நகரங்களையும் அரசையும் விசுவாமித்திர முனிவருக்குக் கொடுத்துவிட்டு மனைவியோடு காசிப்பட்டணம் போனான் என்று படித்திருக்கிறீர்கள். அவன் அம்முனிவருக்குக் கொஞ்சம் பொன் கடன் கொடுக்க வேண்டுமென்பதும் உங்களுக்குத் தெரியும். அவன் காசியாசனிடத்திலாவது தன் மாமன் மதிதய மன்னவனிடத்திலாவது அந்தப் பொன்னை மிகவும் எளிதில் பெற்று அவருக்கு அப்பொழுதே கொடுத்திருக்கலாம். தான் ஒருவரிடத்தில் இல்லையென்று கைநீட்டி ஒன்றைப் பெறுவது தனக்கு என்றைக்கும் இகழ்ச்சியாகும்' என்று நினைத்து அம்மன்னவன் காசிப்பட்டணத்தில் தன் மனைவியை அந்தணனுக்கு அடிமையாக்கியும், தான் பறையனுக்கு அடிமையாகியும் பொன்பெற்று முனிவர் கடனைக் கொடுத்தான். அவனைப்போன்ற உத்தமபுருஷர்களான அனைத்திலும் வல்லவர்கள் பிறரிடம்சென்று தங்களுக்கு இல்லையென்று யாசிக்கவே மாட்டார்கள். அரிச்சந்திரபுராணம்.